Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன்! அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு ஆனித் திங்கள் 1933 ௵ ஜூன் ௴ | இதழ் ௬

## ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அறுபதாமாண்டு நிறைவு விழாவில்

## சைவ சித்தாந்த மகா சமாஜத்தினர்

சமர்ப்பித்த

# உபசரிப்புப் பத்திரம்

நேரிசை யாசிரியப்பா

ஆற்று மணல்நீர்த் துளியினும் பலவென
போற்றும் புலவர்சொற் கேற்றப் பெற்றிய
பெண்ணைசூழ்ந் தலைக்கும் தெண்ணீர்க் கோவல்
ஆதி னத்தறச் சோதிநற் சுடரினை
இருந்தரு ளும்இறை பொருந்தும் பாதிரிப்
புலியூர் மடத்தினின் றொளிதரும் அடிகள்
ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ் ஞான
சிவாசாரிய சுவாமியாம் பெரும்பேர்
அவத்தின ரும்புகழ் தவத்துமிக் குடையாய்!
பரந்தாழ்ந் தெழுந்த சிறந்தநற் புலமைய!
பதிபசு பாச மெனப்பகர் மூன்றின்
விதியறிந் தமைந்து விளங்குமெய்ம் முனிவ!
தண்டமிழ்ப் பண்டையோர் கொண்டநன் னெறியின்

முடித்த முடிபினை முந்துற ஆய்ந்து
சொல்லின் வளமொடு சொல்லுந் திறத்தான்
பொருளின் பெருக்கொடு அருளுமோர் அழகான்
தொடுத்த மொழியினில் எடுத்துக் காட்டி
ஓசையின் ஒழுக்கிற் பேசும் பெற்றியான்
தெள்ளித் தெளிந்த ஒள்ளிய பொருளினைக்
கொள்ளுவோர் கொளும்வகை உள்ளத் துணர்ந்து
அள்ளி யளித்து வள்ளற் பெரும்பேர்
கொள்ளக் கிடைத்த வெள்ளை மனத்தாய்!
பெய்துறைத் தலிற்பெருங் கைவரு தவத்து
இரண்டா மவரிலா இருபெரு முதல்வ!
பெற்ற இன்பம் பெறுகவை யகமென
இடம்பல சென்று கடன்பணி யாற்றியும்
துண்டுப் பிரசுரத் தொண்டுமேற் கொண்டும்
கனிதரு கருத்தை மனிதர்நா மடைய
பேசியும் எழுதியும் பீடுறப் பாடியும்
பேசிடும் சைவப் பிரசாரப் பயிற்சிப்
பள்ளி நிறுவும் ஒள்ளிய கருத்தினாய்!
வீரசை வக்குலம் விளங்குவை எனினும்
மேல்கீழ் என்னப் பால்வகை நாடாது
நிறையும் அருளும் பொறையும் மேற்கொடு
தாயினு மினிய மேவிய அன்பினில்
கற்றவர் மற்றவர் அற்றவர் பற்றலர்க்
குற்றவ ராகியும் உற்றன களைந்தும்
கூடிக் குலாவி நாடிய நினைந்து
அருப்பால் எனும்படி பொருட்பா லூட்டி
மக்களுக் கின்பம் மிக்க விளைப்போய்!
ஆயிரத் துத்தொள் ளாயிரத் தைந்தில்
மறைத்திரு வாளர் மறைமலை யடிகளான்
மடத்துறீ நிறுவின மகாசமா சத்தான்
சித்தாந் தத்தேன் அருந்தினர் சிலரெனும்
குறைவது நீக்கி நிறைவு செய்தனை
அறிவிய லினையொடு அன்புகட் புரிஇ
புத்தா டையணி சித்தாந்த சமாச
வெண்ணெய் நல்லூர் வேலூர் கூடலூர்
சென்னை புதுவை செறிதரு நம்மூர்
ஆண்டுவி ழாவினில் பூண்டனைத் தலைமை
அறுமுறைத் தலைவ! அறுமுகற் றெழுவோய்!
அறுபது ஆண்டுநிற் றருமித் திருநாள்
ஒருபதி னாறில் உலகுவிட் டேய்ந்த

ஞானசம் பந்தர்க் கானநற் பெருநாள்
ஞானியார் என்றுமிஞ் ஞாலத் திருக்கவும்
ஞானசம் பந்தர் ஞாலசம் பந்தம்
எதற்கென் றனன்போல் நுதற்கட் பெருமான்
ஆதலிற் கெடில மணல்நீர்த் துளியினும்
முழுமுதற் பெருமான் முகிழ்க்க
பல்லாண் டுபல்லாண் டுபல்லாண் டுபல்லாண்டே*

திருப்பாதிரிப்புலியூர்
ஸ்ரீமுகளு வைகாசிமீ உஎவ
மூலத்திருநாள்,
9—6—1933.

இங்ஙனம்
**சைவ சித்தாந்த மகா சமாஜத்தினேம்.**

# தந்தைதாய்ப் பேண்†

[G. கலியாணம், B. A., Dip. Ec.,]

இந்த சைவ இளைஞர் கூட்டத்தில் நான் ஏதோ பேசவேண்டுமென்று என்னைப் பணித்ததற்கு இணங்கித் "தந்தைதாய்ப் பேண்" என்னும் பொருள் அதற்குப் பொருத்தமாயிருக்கும் என்ற எண்ணத்துடன் அதைப் பற்றி உங்கள் முன் பேசத் துணிந்தேன். "தந்தைதாய்ப் பேண்" என்பது நம் அருந்தமிழ் மூதாட்டியாம் ஔவைப் பிராட்டி ஆத்திச்சூடியில் அருளியதென்பது அனைவரும் அறிந்ததொன்றும். சாதாரணமாய்ப் பள்ளியில் கற்போரெல்லாம் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்", "மாதாவை ஒருநாளும் மறக்கவேண்டும்" என்று படித்திருப்பார்கள். திருக்குறள் முதற்பாட்டிலும் "அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு" என்பது ஆசிரியருடைய தாயையும் தந்தையும் குறிக்கிறது என்று சொல்லுவார்கள். ஆனல் இந்த மூன்று கூற்றுக்களிலும் தாயைப்பற்றி முதலில் கூறியிருக்க, இப்போது நான் எடுத்துக்கொண்ட விஷயத்திலோ தந்தையை முதலில் கூறப்பட்டிருக்கிறது. ஏனென்றால் தாய் தந்தையர் இருவரையும் காப்பாற்றவேண்டியிருந்தாலும், தந்தை தாயைவிட வயோதிகனாக இருப்பதாலும், உத்தியோகம் முதலிய அலுவல்களில் ஈடுபட்டு இளைத்திருக்கக் கூடுமானபடியாலும், துள்ளித் திரிகின்ற காலத்துத் துடுக்கடக்கிப் பள்ளிக்கு வைத்ததனல் அதிகமாய்க் குழந்தைகள் அன்புக்குப் பாத்திரமாயிருப்பது கஷ்டமானபடியாலும், அவனைக் காப்பாற்றுவது மைந்தர்களின் முக்கிய கடமை என்று வற்புறுத்தவே ஔவை மூதாட்டி தந்தையை முதலில் சொல்லியிருக்கிருர் போலும்.

*இப்பாவை யாத்தவர் - திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் சிடனுர் லால்குடி மருதனுர்.

†சைவசித்தாந்த மகா சமாஜத்தின் 27-ம் ஆண்டு நிறைவு விழாவை யொட்டி நடந்த சைவ இளைஞர் கூட்டத்தில், திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்களின் தலைமையில் யான் பேசியதன் சுருக்கம்.

மைந்தர்கள் தந்தையை ஆலமரத்தை விழ்கள் தாங்குவதுபோல் காப்பாற்ற வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. இளவரசனொருவன் தன் இளமையைத் தன் தந்தைக்குக் கொடுத்து, தந்தையின் மூப்பைப் பெற்றுக் கொண்டதாகக் கூறும் கதை தந்தையிடத்து மகன் காட்டும் நன்றியறிதலைக் காட்டுகிறது. பீஷ்மர் தன் தந்தையாகிய சந்தனுக்காகவே பிரமசரிய விரதம் பூண்டதாகப் பாரதம் கூறுகிறது. இவைகளால் முற்காலத்தில் மைந்தர்கள் தந்தையிடம் காட்டிய அன்பைப்பற்றித் தெரிந்துகொள்கிறோம். ஆனால் இக்காலத்தில் அப்படியெல்லாம் செய்யாவிடினும், தமிழ் மறையிற் கூறியபடியாவது செய்யலாம். அதாவது "மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல்" என்று சொல்லும்படி நடந்துகொள்ளலாம். ஆனால் திருக்குறளில் தந்தை மகனுக்குச் செய்ய வேண்டிய உதவியும் காட்டப்பட்டிருக்கிறது. நான் எடுத்துக்கொண்ட விஷயத்திலோ எப்படிப்பட்ட தந்தையாக இருந்தாலும், தாயாக இருந்தாலும் அவர்களைக் காப்பாற்ற வேண்டியது மக்கள் கடமை என்பதை வற்புறுத்தி யிருக்கிறது. இராமாயணத்தில் இராமர் தமது சிற்றன்னை மூலமாகத் தந்தை வெளிப்படுத்திய கட்டளையைக்கூட சிரமேற் றாங்கி காட்டிற்கு ஏகத் துணிந்ததாகக் காட்டியிருப்பது பாராட்டத்தக்கது. ஏனென்றால் ஈன்ற தாய் தவிர வளர்த்த தாய், கைத்தாய், செவிலித்தாய் முதலியவர்களைக்கூட மகன் காப்பாற்றவேண்டியது என்பது மறக்கொணாது. ஆனால் நாம் சாதாரணமாய் ஈன்ற தாயைச் சிலாகிக்கிறோம். திருவள்ளுவரும் "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோனெனக் கேட்டதாய்" என்றுகாட்டியிருக்கிறார். "ஈன்ற ஞான்றினும் இனிது வந்தனள்" என்று புறநானூற்றில் வருகிறது. பட்டினத்தாரும் "ஐயிரண்டு திங்களாய்...." என்னும் தொடக்கத்த பாட்டிலும் பெற்ற தாயைப் பாராட்டுகிறார். பாலூட்டுந் தாயைப்பற்றி திருப்புகழில் "வந்த பசிதனை யறிந்து முலையமுது தந்து முதுகு தடவிய தாயார்" என்று கூறப்பட்டிருக்கிறது. நம் மணிவாசகப் பெருந்தகை "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" என்று விதந்தோதுகிறார். "தாயினும் இனிய நின்னைச் சரண் அடைந்த நாயேன்" என்று தாயுமானவரும் தாயின் அன்பைச் சிலாகிக்கிறார். இதனாலேயே "தாய் சொல் துறந்தால் வாசகமில்லை" என்ற வாக்கு எழுந்ததுபோலும். இவ்விடத்தில் வாசகம் என்பதற்கு (வாச+அகம்) வசிக்க வீடு என்ற பொருளும் கொள்ளலாம் போலத் தோன்றுகிறது. அதேமாதிரி எல்லா மந்திரங்களைவிட தந்தையின் கட்டளையே விசேஷமென்று குறிக்க "தந்தைசொல் மிக்க மந்திரமில்லை" என்று பழமொழி வழங்குகிறது. பெரிய மகனிடத்தில் தந்தைக்கு அன்பு அதிகம் என்றும், இளைய மகனிடத்தில் தாய்க்கு அன்பு அதிகம் என்றும் "மூத்த மகனிடத் தார்வம் ஈன்றெடுத்த பிதா மகற்கு" என்ற பாட்டில் ஒரு கவி கூறுகிறார். இதனாலேயே சிவபெருமானுக்கு விநாயகரிடத்தில் அன்பு அதிகம் என்று காட்டுவதற்காக அவருக்கு ஒரு மாங்கனி கொடுத்ததாகச் சொல்வர். ஆனால் பொதுவாக எல்லா மக்களிடத்தும் தாய் தந்தையர்க்கு ஒரே வித

மான அன்பு உண்டு என்று திண்ணமாகச் சொல்லலாம். இதனுல்தான் இராமலிங்க அடிகள்,

“ தடித்தவோர் மகனைத் தந்தையீண் டடித்தால் தாயுடன் அணைப்பள்தா யடித்தாற்
பிடித்தொரு தந்தை யணைப்பன்இங் கெனக்குப் பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத் தாடும் புனிதநீ யாதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும் அம்மையப் பாவினி யாற்றேன் ”

என்றருளியுள்ளார். கடவுளுக்கு அம்மையப்பன் என்று பெயர் இருப்பது தந்தை தாய்க்கு மக்களிடத்தில் உள்ள அன்பைக் காட்டுகின்றது. “அம்மையப்பனு யுயிருக்காதாரமாய் நிறைந்த செம்மை சிவன் தாள் என்சிரம்” என்பது வள்ளலார் சாத்திரம். ஆகவே, நாம் தாய்தந்தையரை அவர்களுடைய முதுமைப் பருவத்தில் காப்பாற்ற வேண்டியது தலையாய கடன். அப்படிச் செய்யாவிட்டால் அது செய்ந் நன்றி கொன்றதாகும் என்றும், மற்ற நன்றி கொல்வதைவிட இது மிகவும் பாதகமாகும் என்றும் திருவள்ளுவர் “எந் நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு” என்று சொல்லி யிருக்கிறர்.

இது தவிர, தந்தை என்பதற்கு அறம் என்றும், தாய் என்பதற்கு அன்பு என்றும் பொருள் கொண்டு “தந்தைதாய்ப்பேண்” என்பது பொதுவாக இந்த பூமியிலுள்ள யாவரும் கவனிக்க வேண்டிய கடமையைக் குறிக்கிறது என்று சொல்லலாம் எனத் தோன்றுகிறது. மேலும், நமது தந்தையாகிய சிவன் அறத்தைக் குறிக்கும் விடையை ஊர்தியாகக் கொண்டபடியாலும், தாயாகிய உமை “சிவனுக்கு அன்பு அருள் அம்பிகை” என்று திருப்புகழில் கூறப்பட்டிருப்பதால் அன்பே உரு என்று கொள்வதும் இழுக்காகாது. அன்பிற்குத் தாயையே கூறுவது வழக்கம். “தாயொக்கும் அன்பில்” என்றும், “தாயிற் சிறந்த தயாவான தத்துவனே” என்றும் வருவது காண்க. “அறத்திற்கே அன்பு சார்பென்ப” என்பதற்கு அறமாகிய சிவன், தனக்குச் சார்பாக அன்பாகிய உமையை இடப்பாகத்திற் கொண்டு மங்கை பங்கனுக விளங்குகிறர் என்ற பொருள் தொனிக்கிறதுபோலத் தோன்றுகிறது. ஆகவே “அன்பேசிவம்” என்று திருமூலர் கூறி யிருப்பது உமை வேறு சிவம் வேறு அல்ல என்று குறிப்பதுடன், அறமாகிய சிவம் அன்பாகிய உமையின் உதவியின்றி இயங்காது என்றும் சொல்லலாம் எனத் தோன்றுகிறது. ஏனென்றல் அன்பில்லா அறம் பயனில்லாதவாறு போல. மேலே சொல்லிய தந்தைதாய், அறம் அன்பு ஆகிய சிவம் உமை என்ற கொள்கையை அங்கிகரிப்பவர்கள், “அருள் என்னும் அன்பின் குழவி” என்பதற்கு முருகராகிய அருளைப் பயந்த உமை யென்னும் அன்பு என்று பொருள் கொள்வதற்குப் பின் வாங்கமாட்டார்கள். ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் ஷண்முக கவசத்தில் முதற் பாட்டிலேயே “என்னருள் ஈசனை” என்று காட்டி யிருப்பதால் முருகரை அருள் என்று சொல்வது பொருந்தும். ரிபுகிதையிலும் “அருள் வடிவே அருள் வடிவாம் பரேசன்சேயே” என்றும் முருகரைச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே, நாம் முதலில் ஔவையார் சொன்னபடி அறஞ் செய்ய விரும்பி, அன்பை வெளிப்படுத்தி, அருள் எனத் திகழுமாறு செய்யவேண்டுவது நம்முடைய கடமை என்பதை சோமாஸ்கந்த மூர்த்தம் குறிப்பதாகக் கொள்ளலாம். "அராப்புனைவேணியன் சேய் அருள் வேண்டும்" என்னும் கந்தாலங்காரப் பாட்டில் முருகர் அருள் அவசியம் என்று காட்டியிருப்பதால், முதலில் அராப்புனை வேணியனாகிய அறத்தையும், பிறகு அவனுடைய துணையாகிய உமை யென்னும் அன்பையும் கடைப்பிடித்தால் முருகனாகிய அருள் வெளிப்படும் என்று திண்ணமாகச் சொல்லலாம். ஆகையால் "தந்தை தாய்ப்பேண்" என்பது, தந்தை, தாய், சேய் ஆகிய மூன்றையும் "ஒரு மொழி யொழி தன்னினங் கொளற்குரித்தே" என்றபடி கொள்ளலாம். அப்போது "பொருளாளர் என்பார் கறவையும் கன்றும் போல்வார் பிறர்க்கிடர் காண்பாராயின்" என்று கம்பர் சொல்லிய நிலையை அடையலாம். அத்தகைய நிலையை நீங்கள் எல்லாரும் அடையும்படி எல்லாம் வல்ல இறைவனை வழுத்தி என் பேச்சை முடிக்கின்றேன்.

---

# அகரமும் முதலும்

[கச்சி - முனிசாமி உடையார், B. A.,]

அகரமும் முதலும் என்ற தலைப்பின் கீழ் எல்லா மொழிகளிலும் சிறப்பாகத் தமிழிலும் அகரம் முதலெழுத்தாய் இருக்குந் தன்மையைப் போல் இறைவன் உலகத்திற்குத் தலைவனாயிருத்தலை ஒப்பு நோக்கிக் கூறிப் பின்பு அகரத்திற்கும் மற்ற எழுத்துக்களுக்கும் உள்ள சம்பந்தத்தால் உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள அத்துவித சம்பந்தத்தைச் சிறிது விளக்குவாம்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழ் மக்கள் கல்வி, ஒழுக்கம், அரசியல், வாணிகம், போர்த்தொழில் முதலிய துறைகளில் தலை சிறந்திருந்தனர் என்பது இக்காலத்துக் கிடைத்துள்ள பல சான்றுகளால் போதரும். அவர்கள் புகழ் ஒருகாலத்தில் உலகம் முழுவதும் பரவியிருந்தது என்பதற்குப் போதிய ஆதாரங்கள் உள்ளன. சமய வாழ்க்கையிலும் மற்ற எக்கூட்டத்தாரைக் காட்டிலும் சிறந்திருந்தனர். பண்டைத் தமிழ் மக்களைப்போல் மற்ற எப்பிரிவினரும் நுண்ணிய தத்துவ ஆராய்ச்சியில் ஒரு முடிந்த நிலைக்கு வந்திலர் என்றே கூறலாம். அவர்கள் அமைத்த சிவலிங்க வழிபாட்டின் நுட்பங்களை உற்று நோக்குழி இவ்வுண்மை விளங்கும். அஃது இற்றை ஞான்று மேல் நாட்டார் செய்துவரும் விஞ்ஞான சாத்திர ஆராய்ச்சியினின்றும் புலனாகும். தமிழர் மொழியும் உலகத்தில் மிக்க பழமை வாய்ந்தது. பிறமொழியினின்றும் தோன்றாது, தனக்கு உவமை தானேயாய், இயற்கை ஒலிகளை நிரம்பப் பெற்றதாய், பல மொழிகளுக்குத் தாயாய், யாரும் எளிதின் கற்றுக்கொள்ளக் கூடியதாய் அமைந்துள்ள அம்மொழி தெய்வ மொழி என்று கூறுதற்கும் நாவிழுக்குமோ! அம்மொழியின்

ஒலி வடிவையும், வரிவடிவையும் தோற்றுவித்த பண்டைத் தமிழ் மக்களின் முற்றிய அறிவும் நுண்ணிய ஆராய்ச்சியும் எடுத்துக் கூறும் இயல்பினதோ! அவர்கள் அமைத்துள்ள அகரத்தின் வரிவடிவு மிக்க நுட்பமானது.

இச்சிறப்பு நோக்கியே தமிழர் இறைவனை அகரத்தோடு ஒப்பிட்டுள்ளனர். நச்சினார்க்கினியர் "இறைவன் இயங்கு திணைக் கண்ணும், நிலைத் திணைக் கண்ணும், பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்கு மாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க் கண்ணும் தனி மெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கும் என்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது" என்று கூறினர். மேல் வரும் பாக்களும் இவ்வுண்மையையே வற்புறுத்துகின்றது நோக்கற்பாலது:—

"அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே யுலகு" —வள்ளுவர்.

"அகர முதலானை அணியாப்ப னூரானை" —சம்பந்தர்.

"அக்கரங்க ளின்றாம் அகர உயிரின்றேல்" —மெய்கண்டார்.

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து" —திருவருட்பயன்.

"அகர உயிர்போல் எவ்வுயிரு மானபிரான்" —தாயுமானவர்.

"அகரமென அறிவாகி உலகமெங்கு மமர்ந்த" —விநாயக புராணம்.

இனி அகர எழுத்து இறைவனோடு ஒத்திருக்கின்றதை ஆராய்வாம். எல்லா மொழிகளிலும் எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் முதலாயிருப்பது போல், சேதன உலகம் அசேதன உலகம் ஆகிய இரண்டிற்கும் இறைவன் முதல்வனா யிருக்கின்றான்.

அகரம் மற்ற எழுத்துக்களைப்போல் விகாரமடையாது இயற்கை ஒலியால் பிறத்தலால், விகாரமடைந்து நிற்கும் மற்ற எழுத்துக்களுக்குத் தலைமை எய்தி யிருத்தல் போல் இறைவன் செயற்கை யுணர்வானன்றி இயற்கை யுணர்வால் முதல்வனா யிருக்கின்றான். அகரம் வாயை அங்காத்தல் மாத்திரையானே பிறக்கும். மற்ற எழுத்துக்கள் அங்காத்தலோடு இதழ் குவித்தல் முதலிய முயற்சிகளால் விகாரப்பட்டு நிற்கும். அதுபோல் இறைவனும் பஞ்சபூத சேட்டையால் விகாரப்படாது தத்துவங் கடந்த முதலாய் விளங்குகின்றான்.

மற்ற எழுத்துக்கள் முயற்சி முதலியவற்றால் விகாரம் எய்தினும் அகரமின்றி இயங்குந் தன்மையனவல்ல. அவைகள் பிறத்தற்கு இதழ் குவித்தல் முதலிய முயற்சிகளுடன் அங்காத்தலும் இன்றியமையாதது. மெய்யெழுத்துக்களிடத்தும் அகரம் விரவியிருக்கின்றது. இஃது "மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" என்னும் சூத்திரத்தான் போதரும். அஃதேபோல் இறைவனின்றி சேதன அசேதன உலகங்கள் இயங்கா என்பது வெள்ளிடைமலை. உயிர்கள் பொறி முதலியவற்றோடு கூடி நிற்பினும் இறைவன் அருள் இன்றி எப்பொருளையும் உணரா. அவன் ஆட்டுவித்தாலன்றி யாதொன்றும் ஆடா.

“ மருவிசை பொறியி லொன்றும் மாபூத மைந்தி லொன்றும்
கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்தும் கூடி
ஒருபுல னுகரு மிந்த ஒழுங்கொழிந் துயிரும் ஒன்றைத்
தெரிவுறு தவனொ ழிந்தத் திரள்களும் செயலி லாவே ”

“ அவனருளே கண்ணாகக் காணி னல்லால்.”

என்பன இதற்குச் சான்றாகும்.

அகரம் மற்ற உயிர்களோடும் மெய்களோடும் கலந்திருந்தும் தான் சிறிதும் விகாரமடைகிறதில்லை. “மெய்யோடியையினும் உயிர் இயல்திரியா” என்னும் சூத்திரம் இவ்வுண்மையை விளக்கும். இறைவனும் உலகத்தோடு கலந்திருப்பினும் தான் சிறிதும் பாசத்தால் விகாரமடைகின்றதில்லை. உலகத்தோடு நிற்பினும் அப்பாலாயிருக்கின்றான்.

“ பானுயிர் உணர்வொடு பாச பேதமும்
விரவுறு தெங்கணும் மேவுமுண் மையே.”

அகரம் பொருள் தன்மையால் வேறாகவும், மற்ற எழுத்துக்களோடு விரவி நிற்றலால் அவையாயும், மற்ற எழுத்துக்களை இயக்குவித்தலால் அவைகளுடனாயும் விளங்குகின்றது. இறைவனும் தத்துவங் கடந்து நிற்குந் தன்மையால் உலகத்திற்குப புறம்பாயும், இயங்கு திணைக்கண்ணும், நிலைத் திணைக் கண்ணும், அவற்றின் தன்மையாயிருத்தலால் அவையாவும், அவற்றோடு கலந்து இயக்கு வித்தலால் உடனாயுமிருக் கின்றான். “அவையே தானேயாய்,” “உலகெலாமாகி, வேறாய் உடனுமாய்” என்பன போன்ற மெய்ம்மொழிகள் இதை விளக்குகின்றன.

அகரம் முதல் என்றதனால் இறைவனுடைய சொரூப நிலையும் தடத்த நிலையும் உணரப்படுகின்றன. சொரூப நிலையாவது இறைவன் குணங்குறி செயல்கள் இல்லாதவனாய் நிற்கும் நிலை. தடத்த நிலையாவது மலத்தோடு கட்டுண்டுள்ள பசுக்களை அம்மலத்தினின்றும் விடுவித்து வீடுபேறளிக்க வேண்டும் என்னுங் கருணை மேலீட்டால் அவர் சத்தி சதாசிவம் முதலிய திருமேனிகளைத் தாங்கிப் படைத்தல், அளித்தல், அழித்தல் ஆகிய தொழில்களைப் புரியும் நிலை. எனவே அகரம் முதல் எழுத்தென்பதனால் அஃது விகாரமின்றி இயல்பாகவே நாத மாத்திரையின் விளங்குந் தன்மையால் அதன் சொரூப நிலையை வெளிப்படையாகவும், விகாரப்பட்ட மற்ற எழுத்துக்களை இயக்கவேண்டி அவற்றோடு விரவியிருக்குந் தன்மையால் அதன் தடத்த நிலையைக் குறிப்பாகவும் உணர்த்தப் பெற்றாம்.

எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையதுபோல் இறைவன் உலகங்களுக்கெல்லாம் முதல்வனயிருக்கின்றான் என்னுங் கூற்றால் பதிபசு பாச உண்மை விளங்குகின்றது. அகரத்தைப் பதிக்கும், ஏனைய உயிர் எழுத்துக்களைப் பசுக்களுக்கும், மெய்யெழுத்துக்களைப் பாசத்திற்கும் ஒப்பு நோக்கலாம். அகர உயிர் சிவனிய ஏனைய உயிர்கள் மெய்யெழுத்தோடு சேர்த்தே மற்ற எழுத்துக்களைத் தோற்றுவிக்கின்றன. இறைவன் சேதன உலகமாய பசுவுக்கும், அசேதன உலகமாய பாசத்திற்கும் தலையாயிருந்து

தன் ஆணையால் சேதன உலகத்தை அசேதன உலகத்தோடு ஒட்டியே படைத்தல் காத்தல் முதலிய தொழில்களை இயற்றுகின்றான்.

இதுகாறும் அகரமும் முதல்வனும் ஒலிவடிவால் ஒத்திருத்தலை நோக்கினோம். இனி அகர எழுத்தின் வரிவடிவிலுள்ள தன்மையையும் சிறிது ஆராய்வாம். தெய்வமொழியாம் தமிழில் எல்லா எழுத்துக்களிலுமுள்ள வரிவடிவானது அகரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. காகிதத்தில் வெட்டி எடுக்கப்பட்ட அநேக அகர எழுத்துக்களைப் பல துண்டுகளாக்கி மற்ற எழுத்துக்கள் யாவற்றையும் அமைத்து விடலாம். இறைவனது திருமேனி பிரணவமென்று அறிந்தோர் கூறுவர். அஃது வியஷ்டிப் பிரணவம் சமஷ்டிப் பிரணவம் என இருவகைத்து. வியஷ்டிப் பிரணவம் அகர உகர மகாரமாய் விரிந்தும், சமஷ்டிப் பிரணவம் அகர உகர மகரங்கள் ஒன்று சேர்ந்து ஓம் என்றும் உள்ளதென்பர். எனவே வியஷ்டிப் பிரணவமான அகர உகர மகரங்கள் சமஷ்டிப் பிரணவமான ஓம் என்னும் ஒலி வடிவத்தில் அடங்கி யிருக்கின்றன. அகரவடிவில் உகர மகரங்கள் அடங்கி யிருக்கின்றன. அகரத்தின் மேற்புறத்தில் உகாரமும் கீழ்ப் புறத்தில் மகாரமும் காணக் கிடக்கின்றன. இம் மட்டோ! எல்லா மந்திரங்களும் பிரணவத்தில் அடங்கி யிருத்தல்போல் எல்லா மந்திரங்களுடைய வரிவடிவங்களும் அகர உயிரில் அடங்கி யிருக்கின்றன. ஐந்து அகர எழுத்துக்களைத் தக்கவாறு கத்தரித்து அமைத்தால் ஐந்தெழுத்தும், ஆறு அகரங்களைக் கொண்டு ஆறெழுத்தும், எட்டு அகரங்களைக்கொண்டு எட்டெழுத்தும் அமைக்கலாம். இந்நுட்பத்தை யுணர்ந்தவே அறிவிற் சிறந்த பண்டைத் தமிழர் தம்மொழியின் எழுத்துக்களுக்கு வரிவடிவங்கள் அமைத்தபோது பகரம், டகரம், ரகரம் முதலியவைகளிலுள்ள எளிய வரிவடிவங்களைப் போலாது முதலெழுத்தாகிய அகர உயிருக்கு அவ் வரி வடிவத்தை அமைத்தனர்.

இனி அகர உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள ஒப்புக்களான் அறியப்படும் அத்துவித உண்மையைச் சிறிது விளக்குவாம். உலகத்தில் மூன்று பொருள்கள் அனாதியாய் உள்ளன. அவை பதி, பசு, பாசம் என்பனவாம். சேதனப் பொருளாகிய உயிர்கள் பசுவாம். அசேதனப் பொருளாகிய உலகம் பாசமாம். இவ்விரண்டையும் தக்க முறையில் இயக்குவிக்கும் இறைவன் பதியாம். பதிக்கும் பசுவுக்கும் உள்ள சம்பந்தத்தை அபேதம், பேதம், பேதாபேதம் என்று மூன்று நிலையிற் கூறி உலகத்தில் பல சமயப் போர்கள் நிகழ்கின்றன. சைவ சித்தாந்தமோ மெய்யான அத்துவித நிலையான சுத்தாத்துவிதத்தைத் தேர்ந்த அளவைப் பிரமாணத்தால் நிலை நாட்டும். மலத்தோடு கட்டுண்டுள்ள ஆன்மாக்களை அம்மலத்தினின்றும் களைதல் வேண்டி இறைவன் உயிர்களோடு கலந்து நிற்றலால் அவ்வுயிர்களாயும், அவ்வுயிர்களுக்குப் பொருள்களை அறிவித்துத் தானும் உடன் அறிதலால் உயிர்களுக்கு உடனாயும், தான் முற்றறிவுடையனாய், தத்துவங்களால் விகாரப்படாதவனாய் ஒரு தனிப் பொருளாய் நிற்றலால் தான் யாவற்றிற்கும் வேறாயும் விளங்குகின்றான். ஆகவே இறைவன் உயிர்களிடத்து அத்துவிதமாய் அதாவது இரண்டறக் கலந்து இருக்கின்றான். உயிர்

உடம்புடன் கலந்து அதை எப்படி நடத்துகின்றதோ, அப்படியே இறைவன் உயிர்களோடு கலந்து படைப்பாதி தொழில்களை நிகழ்த்துகின்றான். எனினும் இறைவனும் உயிரும் ஒன்றாகா; ஒன்றாயின், அஃது இறைவனது முழுமுதல் தன்மைக்கு இழுக்காம். இறைவனும் உயிரும் வேறெனின், இருபொருளுக்கும் சம்பந்தமில்லாமல் போய்விடும். போகவே, சிற்றறிவுடைய உயிர்கள் இயங்கா. தனிப் பொருளாகிய இறைவன் உயிருடன் கலந்து நின்றால்தான் முத்தொழிலும் நடைபெறும். 'அத்துவித' மென்ற பொருளில் ஏகான்ம வாதிகள் 'கடவுள் உலகமாயிருக்கின்றான்' என்பர். ஏகம் என்பதும், இரண்டற்றதென்பதும் ஒரே பொருள் தருதல் இன்மையின் அஃது பொருந்தாது. 'ஏகம்' என்பதை உணர்த்த ஒரு சொல் இருக்க, அதை 'இரண்டற்றது' என்ற சொல்லால் கூறவேண்டிய அவசியமில்லை. மறை,'ஏகம்'எனமொழிவது இறைவன் ஒருவனே என்பதைத் தான். அஃது உயிரைக் குறிக்காது; ஏனென்றால், உயிர் மலத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆதலால் உயிர் இறைவனாக மாட்டாது. கடவுள் இன்றி ஒன்றுமில்லை என மறைமொழிவது என்னையெனின், அகர உயிர் இல்லாமல் எப்படி மற்ற எழுத்துக்கள் இல்லையோ, அது போலாம். "ஒன்று நீயல்லை அன்றி யொன்றில்லை" என்பது திருவாசகம். அகர உயிரின் துணைக்கொண்டே மற்ற எழுத்துக்கள் ஒலிக்கின்றன. உயிர்கள் இறைவன் துணைக்கொண்டே இயங்குகின்றன. அகரம் பிற எழுத்துக்களில் கலந்து அவைகளை இயக்குவித்தல்போல் இறைவன் உயிர்களில் கலந்திருந்து முத்தொழில்களையும் நிகழ்த்துகின்றான். பிற எழுத்துக்கள் எங்ஙனம் அகரம் ஆகாவோ, அதுபோல் உயிர்கள் பதிப்பொருளாகா. ஆனால் உயிர் அவனை அடைந்து இன்புறலாம். அது சிவன் முத்தி நிலை. பாமுத்தி நிலையிலும் விளங்கும். "உயிர் தானும் சிவானுபவம் ஒன்றனுக்கே உரித்து" என்பது சித்தியார்.

---

## திருவொற்றியூரில் திருமகிழின்கீழ்

# இராஜாதிராஜன்

# ஆளுடையநம்பி புராணம் கேட்டல்

[தி. கி. நாராயணசாமி நாயடு]

ஒட்டக்கூத்தர் இயற்றிய தக்கயாகப்பரணி, இராசராசன் உலா நூற்களுக்கு நாயகனான இராசராசனுக்குப்பின் அரியணை ஏறியவன் இரண்டாம் இராஜாதிராஜன். இவன் திருவொற்றியூரில் திருமகிழின்கீழ் ஆளுடைய நம்பி புராணமான பெரியபுராணம் கேட்டமை அக்கோயில் சாசன மொன்றில் காணப்படுகிறது. இது தென்னிந்திய சாசன நூலின் ஐந்தாம் பகுதியில் உள்ளது. (No 1358). இதன் காலம் கி. பி. 1177. இவ்விழாவின் காலமும் நாளும் இதில் செதுக்கப்பட்டிருப்பது கவனிக்கத் தகுந்தது. பெரியபுராண படனம் அரசர் பெருமகனால் சிறப்பிக்கப்பட் டிருப்பதை

யுன்னி சிவாலய தர்மகர்த்தர்கள் விழாக் காலங்களில் அதனை மக்கள் கேட்கச் செய்வார்களாக.

(1) ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீராஜாதிராஜ ... வடிவஷ ...... ||உ கோவிராஜகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற்கோட்டத்து, (2) உடையார், திருவொற்றியூருடையார் கோயிலில் மடமுடைய சதுரானன பண்டிதனும், * * * * ஸ்ரீ காரியம் அரிய பிரான் பட்டனும், சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகிஸ்வர பண்டிதனும், காலும் பிடாருஞ் செயங்கொண்ட சோழமண்டல பிடாரனும், (3) திருவொற்றியூர்ப் பிச்சனுங், கோயில் நாயகம் படம்பக்க நாய பட்டனும், கோயிற் கணக்குத் * * * திருப்பங்குனியுத்திரத்து ஆறுந் திருநாளான புதன்கிழமையும் ஏகாதசியும் பெற்ற ஆயிலையத்தினன்று படம்பக்கநாயக தேவர் திருமகிழின்கீழ் திருவோலக்கஞ் செய்தெழுந்தரு(4)ளி யிருந்த ஆளுடையநம்பி ஸ்ரீபுராணம் கேட்டருளாநிற்க உடையார் தேவதானம்: வடுகப்பெரும் பாக்கத்துக்காணி * * * * யென்று விண்ணப்பஞ்செய்ய நம்மூர்களில் இணையூர் அமுதங் கிழவன் பெரியான் சோமனுக்குத் தண்டிசன் விலையாக விற்றுக் காணியாகக் கொடுக்கவென்று திருவாய் மொழி(5)ந்தருள இவ்வூர்க்குக் காணிவிலை அன்றாடு நற்காசு நூற்றிருபதும் ஸ்ரீ பண்டாரத் தொடுக்குக்கொண்டு இவ்வ[முதங்கி]ழவன் பெரியான் சோமனுக்கு ஸ்ரீ பண்டாரத்திறை யிறுக்கவும் இவனுக்குமிவன் வம்ஸத்தார்க்கும் விற்றுெற்றி விக்கிரயத்துக் குரித்தாவதாக விற்றுக்கொடுத்தோம். இப்படிக்கு இவை (6) மடமுடைய சதுரானன பண்டிதன் எழுத்து||—இப்படிக்கு இவை திருவீதி வேயிடங் கொண்டான் எழுத்து| * * * ன் எழுத்து—இப்படிக்கு இவை சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீஸ்வர பண்டிதன் எழுத்து||—இப்படிக்கு இவை காலும் பிடாரஞ் செயங்கொண்ட சோழமண்டல பிடாரன் எழுத்து||—இப்படிக்கு (7) இவை திருவொற்றியூர்ப் பிச்சன் எழுத்து||—இப்படிக்கு இவை கோயில் நாயகம் படம்பக்க நாயகபட்டன் எழுத்து||— * * *ன் உறவாக்கினன் எழுத்து.

---

# நம் நாடும் கல்வியும்

[சு. மு. இராமசுப்பிரமணியன் செட்டியார், கோநகர்]

அறுபத்து நான்கு கலைகள் வளர்ந்த நமது நாடு, இது காலை எந்நிலையிலுள்ளது என்பதை, ஒவ்வொரு தமிழனும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். பிற நாட்டவரெல்லாம் தத்தம் மொழிகளை, விரும்பிக் கற்றும் கேட்டும், அவ்வந் நாட்டு மொழிகளிலெல்லாம், பிற நாட்டு மொழிகளிலுள்ள அருமையான நூல்களை யெல்லாம் மொழி பெயர்த்து, மேனிலை யடைந்து வருகின்றனர். ஆனால், நமது தமிழ் நாட்டவரோ, அந்நிய நாட்டவரின் வசப்

பட்டு, அவர்களையும் அவர்கள் மொழிகளையும் போற்றிப் புகழ்ந்து, அப்பிற நாட்டு மொழிகளையே விரும்பிக் கற்பதனோடமையாது, எல்லா மொழிகட்கும் தாய் மொழியா யிலங்கும் தமிழ் மொழியை யிகழ்ந்து தள்ளுகின்றனர். என்னே தமிழரின் பேதைமை! நம் தமிழ் நூல்களாகிய திருக்குறள், திருவாசகம் முதலிய செவ்விய நூல்களெல்லாம், எத்தனை மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றும், அம்மொழியாளர்கட்குஞ் சுவை யளித்தே வருகின்றன. அவ்வாறே நாமும், பிற நாட்டு மொழிகளில் செவ்விதாக விளங்கும் நூல்களை யெல்லாம், நம் தமிழில் மொழி பெயர்த்து, அந்நிய நாட்டாரது ஒழுக்க வழக்கங்களையும், நன்மை தீமைகளையு மறிந்து, கொள்வன கொண்டு அல்லன விடுக்க வேண்டியதாயிருக்க, நம் நாட்டு அரும் பெரும் புலவர் பெரு மக்களெல்லாம், பிற்காலத்தவர்களாகிய நமக்குச் சிறந்த நிதியாகப் பாடித் திரட்டி வைத்துள்ள, திருமுறைகள், சாத்திரங்கள், தோத்திரங்கள், சங்க நூல்கள் முதலியவெல்லாம், அச்சுவாகனமேறி வெளிப் போந்துலவவும், அதனையேனும் விலை கொடுத்து வாங்கிப் படித்தல் இயலாத காரியமா? அன்பர்களே! "வெல்லக் கட்டியுஞ் சர்க்கரையியலாம் விக்கிக் கொள்வதற்காரென்ன செய்வரே" என்பது போலல்லவாயிருக்கின்றது நமது செய்கை! தமிழ் நூல்கள் பல, படிப்பாரற்றுக் கிடக்கும் இக்காலத்து, நமக்கு அந்நிய நாட்டு நூல்கள் எற்றுக்கு? நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியிலே ஒரு நூல் இருக்குமானால் அந்நூலைக் கையால் தொடவும் உங்கள் மனம் இடங் கொடுக்கவில்லை. ஆனால் அதே நூலைப் பிற நாட்டு அறிஞனொருவன் மொழி பெயர்த்துத் தம் மொழியில் வைத்திருப்பானாயின், அது காலை, அந்நூல் உங்களுக்குத் தேனெனக் கண்டெனத் தித்திக்கின்றது. இது, தாயார் தரும் அரும் பொருளொன்றை யிகழ்ந்து, மனையாள் தரும் மாண்பறு பொருளை மகிழ்ச்சியுடன் போற்றுவதை யொக்கும். 'கிழப் பிணமே! மூலையிலேகிட' என்று தாயாரை யிகழ்ந்து தீண்டாட விட்டுப் புதியாளாய பெண்டாட்டியைக் கொண்டாடுங் கலிகாலமல்லவாயிது? ஆதலின், தமிழ்த் தாயை யிகழ்ந்து அவள் தரும் அரும் பொருளைப் புறக்கணிப்பது மியல்பே. அச்சியந்திரம் உண்டாகாத முற்காலத்து, நம் மொழியை, நம் நூல்களைப் போற்றி, அதனை அன்போடு படித்த பெரியார்களெல்லாம் மூடர்களா? அந்தோ! சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பெரிய நூல்களைப் பனையேட்டி லெழுத எத்தனை மாதங்கள், எத்தனை ஆண்டுகள் செல்லும்? இப்போதோ, நிமிடத்திற்கு ஆயிரம் பதினாயிரம் புத்தகங்கள் உண்டாக்குகின்ற இயந்திரங்கள் ஏற்பட்டு விட்டன. புத்தகம் உண்டாவதற்குச் சிரம மிகுந்த அக்காலத்துத், தமிழணங்கை - தமிழ்க் கல்வியை, ஏற்றிப் போற்றி ஆர்வத்தோடு கற்றனர். சிரமமில்லா இக்காலத்துத் தமிழ்க் கல்வி தேடுவாரற்றுக் கிடக்கின்றது.

இனி, மேனாட்டவரெல்லாம், கைத்தொழில், வியாபாரம் முதலிய துறைகளில் மேம்பட்டு விளங்குவதற்கும், ஒற்றுமையாய் வாழ்வதற்கும் காரணம் கல்வியே. மஹாத்மா காந்தியால் விரும்பப் பெறும் தீண்டாதார் ஆலயப் பிரவேசத்தால், ஒருநாளும் ஒற்றுமை உண்டாகப் போவதில்லை. அதனால், ஜாதிப் பிளவு, சமயப் பிளவு, கக்ஷிப் பிளவு முதலியன ஏற்பட்டு

மிருந்த கலகத்திற்கு இடமே யேற்படும். காந்திஜீ - இந்திய நாட்டவர்க்குள் ஒற்றுமை ஏற்பட எண்ணுபவர், இம்மாதிரியான கலக முண்டாகும் முறைகளில் தலையிடாது, தாம் உலகம் போற்றும் உத்தமராகவே எப்போதும் விளங்கும்படி, ஆங்காங்கு, தீண்டாதார் முன்னேற்றமடையத் தகுந்த முறையில், கல்விச்சாலைகளேற்படுத்தக் கிராமங்கள்தோறும் பிரசாரம் செய்து, அவ்வாறே கலாசாலைக ளேற்படுத்தி, அக்கலாசாலைகளில் நாட்டுப் பெருமை, மொழிப்பெருமை முதலியவைகளை அத்தீண்டாதார்க்குப் போதித்து "கற்கக் கசடறக் கற்பவை கற்றபின், நிற்கஅதற்குத்தக"-என்னுந் தேவர் வாக்குக்கு இலக்கியராக அவர்கள் நிற்கும்படி செய்வாரானால் "எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும், அக்குடியிற் கற்றோரை வருக என்பார்" என அதிவீர ராம பாண்டியருளியபடி, உயர்ந்த வகுப்பார், அவர்களைத் தாமே வலிய அழைத்துத் தங்களோடு சமமான நிலையில் வைத்துக் கொள்வார்கள். அவ்வாறின்றி, சீர்திருந்தாப் பஞ்சமர்களைத் தேவாலயங்களில் விடுவதென்பது பொருந்தாத காரியமாகும். நாம் ஒரு ரயில் பிரயாணஞ் செய்கின்றோமென வைத்துக்கொள்ளுங்கள் : அதுபோழ்து, நாம் ஏறியுள்ள கம்பார்ட்மெண்டில் ஏறுவதற்கு, ஓர் ஆதித்திராவிடன், சிறந்த உடைகளை யணிந்தவனும் நாகரிக முள்ளவனும் வருவானானால், அவனை முன் பின் நாம் அறியாதவர்களா யிருப்பினும், நம்முடைய பெஞ்சியில், (Bench) அவனுக்கு இடங் கொடுக்கின்றோம். ஆனால், ஓர் உயர்ந்த ஜாதியான் அநாகரிகமாக வருவானானால், அவனை யெவ்வகையிலும் அங்கிருந்து துரத்த முயல்கின்றோம். அதுபோல, நடக்கைக்குத் தக்கவாறு, நாகரிகமாக ஆகத், தானே ஆதித்திராவிடருக்கும் நமக்கும் வேற்றுமை தோன்றாது. அவ்வாறு நாகரிகம் உண்டாவதற்குக் கல்விவேண்டும். ஆதலின், இம்முயற்சியில் காந்திஜீ இறங்கி யிருப்பாரானால் அவரெண்ணம் கைகூடியிருக்கும்.

அந்நியநாட்டுக் கல்விமுறை நம் நாட்டில் ஏற்படவே, நம் நாட்டுக் கல்வி முறைகளெல்லாம் நழுவவிடப்பட்டன. நம் நாட்டுக் கல்வி முறைகள் எத்தகைய சிறந்த முறையில் ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றன வென்பதை, நுண்ணிதினாராய்ந்தவரே யறிவர். ஆரம்பத்தில், காத்தற் கடவுளாகிய திருமாலின் திருநாமமும், ஓங்காரமும்; அதன் பிறகு ஆசிரிய வாழ்த்து. என்னே! நம் முன்னோரின் பரந்த தெய்வக் கொள்கை! "ஹரி: ஓம், நன்றாக, குரு வாழ்க: குருவே துணை" என்பதன்றோ நம் இளஞ்சிறார்களுக்கு ஆரம்பக் கல்வியும் கடவுள் வாழ்த்தும்! பின்பு, அக்ஷராப்யாச காலத்தும், ஐந்து வயதுடைய இளஞ் சிறுவர்கள் சிறிதுங் கஷ்டமுறாவண்ணம், வாயைத் திறந்தால் என்ன ஒலி உண்டாகின்றதோ அது முதலெழுத்து. இவ்வளவு சிறந்த முறையில் சிறுவர்களுக்குப் போதிக்க ஏற்படுத்தப் பெற்றிருக்கும் இம்முறைகளெல்லாம் நீங்கி, இப்போது ஏ (A) யும் பீ (B)யும் அக்ஷராப்யாசம் ஆகின்றன. அதன் பிறகு புத்தகப் படிப்புக்குச் சென்றாலோ, ஸீ ஏ டி காட் (Cat)டும், ஆர் ஏ டி ராட் (Rat)டும் சொல்லிக் கொடுக்கப் பெற்றுப், பூனையும் எலியும் சண்டையிடும் படம் முதலிற் போடப்பெற்ற பாடங்கள் போதிக்கப்படுகின்றன. இது இவ்வாறிருக்கத் தமிழ் வாசகங்களுள் நுழைந்தாலோ, கணக்கிட முடியாத இலக்கண வழுக்கள் நிறைந்த வாக்கியங்கள் மலிந்த புத்தகங்களே ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றன. அறிஞர்கள் எழுதிய வாசகங்கள் அறிஞர்களிடமே அமைந்திருக்க வேண்டியிருக்கின்றன.

பால சிட்சைப் புத்தகமொன்றில், டகரம் மொழிக்கு முதலில் வந்த சொற்கள், முதற் பாடத்தில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. டகரம் மொழிக்கு முதலில் வரத் தமிழிலக்கணங்கள் எவற்றிலும் ஆதாரமில்லை. அச்சொற்களை முதற் பாடத்தில் அமைத்துள்ளதற்குக் காரணங் கேட்பின், "ட, என்னும் எழுத்து சுலபமாக எழுதத் தகுந்தது. ஆதலின் அதனை முதலில் அமைத்தால் மாணவர்களுக்கு எழுத்துக்கள் சுலபமாக விளங்கும்" எனச் சிலர் சமாதானங் கூறுவர். அது முறையற்றதாகும். பாடங்களில் தமிழ் நெடுங் கணக்கு வரிசைப்படியே அகரம் முதலாக எழுதப் பெறவேண்டும். ஒரு சிறு குழந்தையினிடம் பென்சலைக் கொடுத்து எழுதச் சொல்லுவோமானால் அது ஒருகாலும் நேர் கோடு போடாது; சுழித்தலையே செய்யும். ஆதலின், அகரமே முதலில் சிறுவர்களுக்குச் சுலபமாக மனதிற் பதியக் கூடிய எழுத்தாகும்.

குறிப்பு:—இக்கட்டுரையில் சில கருத்துக்கள் மறுக்கற்பாலன.—உதவிப் பத்திராசிரியர்.

---

# பிறவிக்கடல் நீத்த பிரான்

[சே. சிவஞானம் பிள்ளை]

(மலர் ௧, பக்கம் ௧௨௦-ன் தொடர்ச்சி)

அகச்சான்று:--இவ்வற்புதத்திற்கு வாகீசர் திருவாய் மலர்ந்த தேவாரப்பதிகங்களில் அச்சான்று யாதும் காணக் கிடைத்தில. "அருந்தவத்தோர் தொழுதேத்தும் அம்மான் தன்னை ஆராத இன்னமுதை அடியார் தம்மேல் வருந் துயரம் தவிர்ப்பானை உமையாள் நங்கை-மணவாள நம்பியை என் மருந்து தன்னை" என்னும் தாண்டகத்தை ஒருவாறு பொருத்தலாம் போலும். இவ்வற்புதத்தை நமது துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,

"தடைவாழை மேல்மடவா ரல்குல்பாம்பு தொடமயங்கி
கடைவாய்ப் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுகுலை
உடைவாழை மேலாகந் தீண்டமாய்ந்த ஒருவனுயிர்
அடைவானருள் புரியுந் திருநாவுக்கரசினையே"

என்றும், இவ்வப்பூதியடிகளின் அன்பின் திறத்தை,

"எனக்கன்புகின் பொருட்டெய்தார தென்கொல் வெள்ளேறுடையான்
தனக்கன்பு செய்திருத் தாண்டக வேந்தஇத் தாரணியில்
நினக்கன்பு செய்கின்ற அப்பூதி யைச்சிவ நேசமுறும்
இனர்க்கன்பு செய்நம்பி யாரூரான் ஏத்தும் இயல்டறிந்தே"

"உற்று னலன்றவக் தீயினின் றுனல னூண்புனலா
அற்று னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்று னெழுதியுங் கூறிய மேயென்றுந் தன்பில்பதம்
பெற்று னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே"

என்றும் போற்றியிருக்கின்றனர். இந்த அற்புதத்தினையே பிற்காலத்துத் தமிழ்ப்பேரறிஞர்,

"ஒருகலி மீட்பான் காலற்(கு) ஓலையொன் றெழுதியச்சம்
பெருகவுந் தோற்றியுய்த்த பெருஞ்சிலை யிளமன்னாணைத்
தருக அப்பூதி மைந்தன்தனை எனக் காலகாலற்கு
அருகலில் பதிகம்பாடி அருளினோற் கன்பு செய்வாம்"

என்று புகழ்ந்து பாடி யிருக்கின்றனர்.

## படிக்காசு பெறுதல்

திங்களூரினின்றும் நீங்கித் திருப்புவனம் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாரூரைச் சார்ந்தனர் வாகிசர். திருவாரூரை அகன்று திருப்புகலூரைச் சார்ந்த அளவில் அங்கே எழுந்தருளியிருந்த ஞான வாரமுதமுண்ட பிள்ளையார் திருநாவுக்கரசரை எதிர்கொண்டனர். இருபெருங் குரவரும் அங்கே சிலநாள் முருகநாயனர் திருமடத்துத் தங்கியிருந்தனர். திருப்புகலூருக்கு அருகேயுள்ள புண்ணியத் தலங்களைத் தரிசிப்பான் வேண்டி இருபெரும் சமயாசிரியர்களும் திருவம்பர் திருவாக்கூர் முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவீழிமிழலையைச் சார்ந்து அங்கே சிலநாள் தங்கி யிருந்தனர். அக்காலத்து மழை சுருங்கப் பஞ்சம் வந்தெய்தியது. உயிர்களெல்லாம் இடர் உழந்தன. இதனை அறிந்த வீழியழகர் இருவர் கனவிலும் எழுந்தருளி,

> "காலநிலைமையால் உங்கள் கருத்தில் வாட்டமுறீ ரெனினும்
> ஏலவும்மை வழிபடுவார்க் களிக்க அளிக்கின்றோ மென்று
> கோலங்காண எழுந்தருளிக் குலவும் பெருமை இருவர்க்கும்
> ஞாலமறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனர்"

கிழக்குப் பீடத்தும் மேற்குப் பீடத்தும் வைத்த காசைக்கொண்டு இருபெருங் குரவரும் அடியார்கட்கு எல்லாம் சோறிட்டனர். ஈசராம் மிழலை இறையவரிடத்து ஞானசம்பந்தப் பெருமான் திருமாமகனர் என்னும் முறைமையினல் காசுவாசியுடன் பெற்றனர். வாகிசர் கைத்தொண்டாகும் அடிமையினல் வாசியில்லாக் காசு பெற்று உவந்தனர். காலந்தவறு நீங்கி மேகம் பொழிய உலகம் க்ஷேமம் அடைந்தது. இறைவரும் படிக்காசு கொடுத்தலை நிறுத்திவிட்டனர்.

அகச்சான்று:—இறைவன் தானே படிக்காசு கொடுத்தமையால் வாகிசர் தாம் படிக்காசு வேண்டிப் பதிகம் பாடவில்லை என்பதே பொருத்தம். தனக்குப் படிக்காசு கிடைத்தமையை வாகிசர்,

> "பாடிப்பெற்ற பரிசில்பழங்காசு
> வாடவாட்டத் தவிர்ப்பார் அவரைப்போல்
> தேடிக்கொண்டு திருவாய் மூர்க்கேளனு
> ஒடிப்போந்திங் கொளித்தவா றென்கொலோ"

என்னும் திருப்பாட்டில் குறிப்பித்திருக்கின்றனர். தமிழ் வேத வியாசராகிய நம்பியாண்டார் நம்பிகள்,

> "பாடிய செந்தமிழாற் பழங்காசு பரிசில்பெற்ற
> நீடிய சீர்த்திருஞான சம்பந்தன் நிறைபுகழால்
> தேடிய பூந்திருநாவுக் கரசோ(டு) எழின்மிழலைக்
> கூடிய கூட்டத்தி னுளதாய்த்(து) இக்குவலயமே"

என்று எடுத்துரைத்தனர். துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும்,

> "கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ் சின்னமுங் கொள்ளுமொரு
> பிள்ளைக் கதுதகும் நாவரசாய பெருந்தகை யோய்
> கள்ளைக் குவளையுமிழ் வீழியிற் படிக்காசு ஒன்றுநீ
> வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினையே"

என்று துதித்திருப்பதும் போற்றற்பாலதே யாம்.

## கதவு கடுகத் திறத்தல்

திருவீழிமிழலையில் தங்கியிருந்த இருபெருங்குரவரும் அத்தலத்தை அரிதின் நீங்கி வேதாரணியம் சென்றனர். அங்கே மறைகள் அர்ச்சனை

செய்து கதவந் திருக்காப்புச் செய்த நாள் முதல் கதவு அடைபட்டிருப்பதையும், வேறொரு வாயில் செய்து அடியார்கள் உள்ளே செல்கின்றார்கள் என்பதையும் இருபெருங்குரவரும் உணர்ந்து கொண்டனர். ஆளுடைய பிள்ளையார் அப்பரை நோக்கி, 'இருவேமும் உள்புக்கு இறைவனை இறைஞ்சக் கதவு திருக்காப்பு நீக்கப் பாடும்' என்றனர். வாகீசரும் மறைக்காட்டுறையும் மணாளனைக் கதவம் திருக்காப்பு நீங்குமாறு கருணை செய்யும்படி 'பண்ணின்நேர் மொழியாளுமை பங்கரோ' என்னும் திருப்பதிகம் திருவாய் மலர்ந்தருளினார். திருக்கதவும் காப்பு நீங்கியது. ஆண்ட அரசும் சிவக்கன்றும் உள்புகுந்து இறைவனைத் தரிசித்துப் புறம் போந்தனர். புறம்பே போந்த வாகீசர், சிவக்கன்றை நோக்கி, 'இக்கதவம் அடைக்கும்படி நீரும் பாடியருளும்' என்று வேண்டினர். ஞானசம்பந்தப் பெருமானார் பதிகம் பாடத் திருக்கதவம் அடைத்தது.

அகச்சான்று :—"கண்ணி னாலுமைக் காணக் கதவினைத் - திண்ணமாகத் திறந்தருள் செய்மினே" என்பதனால் தான் கதவு திறக்கப் பாடினமைக்கும், 'திறக்கப்பாடிய என்னினுஞ் செந்தமிழ்-உறைக்கப்பாடி அடைப்பித்தா ருங்கின்றார்' என்று அருளினமையால் கதவு மூடினமைக்கும் போதிய சான்றுகள் தேவாரத்திலே கிடைத்தன. இவ்வற்புதத்தினை நமது துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,

"தாயிலி யாருஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னாறி வாகிய காமமுன் கொண்டிருந்த
வாயிலி னணவ மாருங் கபாடமும் மன்றிறந்து
கோயிலி யாகிய சொல்லிறை காட்டுவன் நோக்குதற்கே."

என்று வியந்து துதித்திருக்கின்றனர்.

### வாய்மூருக்குச் செல்லுதல்

ஞானசம்பந்தப் பெருமான் வேண்டுகோட்கு இணங்கித் தான் திருக்கதவம் காப்பு நீங்க, 'பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ' என்னும் பதிகம் பாட, அப்பதிகத்தில் ஒன்பது செய்யுள் முடியும்வரையும் கதவு காப்புநீங்கா திருக்கவும், 'இரக்க மொன்றிலீர் எம்பெரு மானிரே' என்னும் திருக்காப்புச் செய்யுள் பாடிய பிறகே திருக்கதவுக் காப்பு நீங்கியது. ஆளுடைய பிள்ளையார் அடைக்கப் பாடிய தேவாரப் பதிகத்தின் முதற்செய்யுள் பாடிய அளவிலேயே கதவம் அடைத்துக்கொண்டது. வாகீசர் தாம்பாடி அரிதில் திறக்கவும், ஆளுடைய பிள்ளையார் பாடி எளிதில் அடைக்கவும் நேர்ந்தமையைக் கருதி, 'நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்' என்று கவன்று திருமடத்தில் ஓர்பால் அறிதுயில் அமர்ந்திருந்தனர். வாகீசர் வருத்தத்துடன் உறங்குவதைக் கண்ட அடியார்க் கெளியவராம் சிவபெருமான் அவர் கனவில் 'பொன்னின்மேனி வெண்ணீறு புனைந்த' கோலத்தினொடு போந்து, 'வாய்மூரில் இருப்போம் தொடரவா' என்று அருளிச்செய்தனர். வாகீசர் உடனே விழித்து எழுந்து, "மன்னு மாமறைக் காட்டு மணாளனார் - உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத் - தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி - என்னை வாவென்று போனார தென்கொலோ" என்னும் திருப்பதிகம் பாடி அவர்பின் சென்றனர். பின்சென்ற வாகீசர் இறைவனைச் சமீபிக்கப் பெற்றிலர். அணித்தே காட்சி கொடுப்பவர்போல ஆதிமூர்த்தியும் பொன்னின்கோயில் ஒன்றுகாட்டி அதனுட்புகுந்தனர். வாகீசரும் அதனுட் புக்கனர்.

(தொடரும்)

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி ஏ.]

(மலர் ௯, இதழ் ௫, 128-ம் பக்கத் தொடர்ச்சி)

## ௪. அறியுநெறி

புலன்களைப் போகநீக்கிப் புந்தியை யொருங்கவைத்து
இனங்களைப் போகநின் றிரண்டையும் நீக்கியொன்றாய்
மலங்களை மாற்றவல்லார் மனத்தினுட் போகமாகிச்
சினங்களைக் களைவர்போலுந் திருப்பயற் றூரனாரே. ௫௧

(உரை) திருப்பயற்றூரன் - திருப்பயற்றூர் என்னும் தலத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமான் ; புலன்களைப் போகநீக்கி (உம்) - தங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்களை விடயங்களிற் செல்லவொட்டாமற் றடுத்தும் ; புந்தியை ஒருங்கவைத்து (உம்) - புத்தி, இந்திரியங்களோடும் இந்திரியங்கள் விடயங்களோடும் சென்று விடய ஞானம் உண்டாகாதபடி தங்களிடத்தில் (ஆன்மாவினிடம்) புத்தியானது ஒடுங்கும்படி செய்தும் ; இனங்களைப் போகநின்று (உம்) - அவ்வாறு புத்தி ஒடுங்கியதால் அப்புத்தியிலிருந்து காரியப்பட்டு அதற்கு இனங்களாயுள்ள தன்மம் (அறம்) ஞானம் (அறிவு) வைராக்கியம் (வெறுப்பு) ஐசுவரியம் (செல்வம்) அதர்மம் (மறம்) அஞ்ஞானம் (அறியாமை) அவைராக்கியம் (விருப்பு) அனைசுவரியம் (வறுமை) ஆகிய எட்டுப் பாவகங்களும் அப்பாவகங்களாகிய ஐம்பது சித்திகளும் அவற்றின் விரிவுகளுமாகிய எல்லாம் தங்களைவிட்டுப் போகும்படி செய்து அவற்றாற் றாக்கப்படாது நிலைத்து நின்றும் ; இரண்டையும் நீக்கி (உம்) - இங்ஙனம் தங்களிடம் ஒடுங்கிய தத்துவங்களாலாகிய கருவி அறிவையும் (பாசஞானத்தையும்) கருவி அறிவு நீங்கிய பொழுது உயிர் அறிவு முனைத்து நில்லாதபடி அவ்வுயிர் அறிவையும் (பசுஞானத்தையும்) தங்களிடமிருந்து பற்றற நீக்கி ; ஒன்றாய் (உம்) - அங்ஙனம் கருவி அறிவும் உயிர் அறிவுமாகிய இரண்டும் நீங்கியபொழுது காணும் அருட்பேரொளி அறிவுக்குள் அடங்கி அதனுடன் வேறற ஒன்றாகி (ஏகமாகி)யும் ; மலங்களை மாற்றவல்லார் - ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் நீக்கவல்ல அடியார்களுடைய ; மனத்தினுள் போகம்ஆகி - தெள்ளறிவு விளங்கப் பெற்ற தூய உள்ளத்தில் பேரின்பப் பொருளாய் நிறைந்தும் ; சினங்களை மாற்றவல்லார் - பிராரத்த வினைப் பயனாகத் துன்பம் நுகர நேரின் அத்துன்பத்தின் மேல் வெறுப்புக்கொண்டு உள்ளத்தில் எழக் கடவதாகிய எதிர்ப்புகளை (reaction) ஒழிக்கவல்லவர் ஆவர்.

(விளக்கம்) திருப்பயற்றூரனார் மலங்களை மாற்றவல்லார் மனத்தினுட் போகமாகிச் சினங்களைக் களைவர் என்று பொருள் முடிபு செய்க. அடியார்கள் எங்ஙனம் மலங்களை மாற்றவல்லார் என்பதற்குப் புலன்களைப் போக நீக்கியும் புந்தியை ஒருங்கவைத்தும் இனங்களைப் போகநின்றும் இரண்டையும் நீக்கியும் ஒன்றாயும் மலங்களை மாற்றவல்லார் என்றும் பொருள் முடிபு செய்க. போக, நீக்க, ஒருங்கவைத்து, போகநின்று, நீக்கி, ஒன்றாய் என்ற வினையெச்சங்கள் மாற்ற என்ற வினை எச்சத்தைக் கொண்டு முடிந்தன. மாற்ற என்ற வினை யெச்சம், வல்லார் என்ற குறிப்பு வினையாலணையும் பெயரில் அடங்கி யிருக்கிற வல்லர் என்ற குறிப்பு வினை முற்றைக் கொண்டு முடிந்தது. புலன்களைப் போகநீக்க - புலன்கள் - இந்திரியங்கள் தங்கும் இடங்கள். அது இங்கே ஆகு பெயராய் இந்திரியங்களைக் குறிக்கின்றது. இனம்பற்றி இந்திரியங்களுக்கு உடனாய் நின்று துணை செய்யும் தூல தன்மாத்திரைகளும் சூக்கும தன் மாத்திரைகளுங் கொள்க. புலன்களை என்ற சொல்லைப் புலன்களினது என்ற ஆறும் வேற்றுமைக்கு உருபு மயக்கமாகக் கொண்டும் இந்திரியங்களது போகம் அதாவது இந்திரியங்களால் நுகரப்படும் விடய போகங்களை நீக்கி என்று பொருள் கூறினும் பொருந்தும். நீக்கி என்ற வினை

யெச்சத்திற்குப் பின் தொக்கி நிற்கிற உம் விரித்துப் பொருள் உரைக்கப்பட்டது. அவ்வாறே பின் வருகிற வைத்து, நின்று, நீக்கு, ஒன்றாய் என்ற வினை எச்சங்களுக்கும் கொள்க. புந்தியில் ஒருங்க வைத்து (உம்) - மனம் அகங்காரம் புத்தி சித்தம் ஆகிய அந்தக் காரணங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் சூக்கும தன் மாத்திரைகள் தூல தன் மாத்திரைகள் பும் சத்துவ மலத்தோடு கூடிய புருடனுகிய ஆன்மாவுக்கு உலக விடயபோக நுகர்ச்சிகளுக்கு இடமாக (போக்கியமாக) உள்ளன. ஆன்மாவுக்கு விடய ஞானம் பொதுமையின் நிர்விகற்பகக் காட்சியாய் விளங்குதற்கு வித்தியா தத்துவத்திலுள்ள வித்தை கருவியாயுள்ளது. விடய ஞானம் சிறப்பு வகையில் பெயர் சாதி முதலியவற்றால் நிச்சயிக்கப்பட்ட சவிகற்பக் காட்சியாய் விளங்குதற்கு புத்தி கருவியாயுள்ளது. சாத்துவிகக் குணத்தான் மேற்பட்டு விளங்கும் புத்தியானது ஆன்மாவிற்கு எதிர் முகமாய வழி கண்ணாடியின் நிழல் போல அதன்கண் எதிர் விம்பமாய் விடய ஞானம் உண்டாகின்றது. நிச்சயித்த பின் புத்தியானது அவ்வவ்விடய வடிவினதாய்ப் பரிணமித்துத் தோன்றும் ஞானமாய் விளங்குதற்கு ஆன்மாவுக்கு அடுத்த புலனுதற்கு கருவியாய் அமைந்துள்ளது ஆகலின் அது புருடனால் செய்யப்படும் புண்ணிய பாவங்கட்கும் அப்புண்ணிய பாவங்களாலாகிய தன்மை ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் அதர்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அனைசுவரியம் என்னும் எட்டுப் பாவகங்களுக்கும் அப்பாவகங்களாலாகிய சித்தி முதலியவைகளுக்கும் பற்றுக்கோடாயுள்ளது. இவை எல்லாம் விடய ஞானத்துக்கு ஏதுவாயுள்ளன. இதன் விரிவை சிவஞான பாடியத்தில் காண்க. இவ்வாறு விடய ஞானமாகிய மயக்க அறிவு விளக்குதற்கு புத்தி சிறந்த கருவியாயிருத்தலின் அது முதலாவது தனது சேட்டையற்று ஆன்மாவின்கண் ஒடுங்கினாலொழிய விடய ஞானமாகிய பாச ஞானம் ஒழியாது; பதிஞானத்துக்கு ஏதுவாகிய தெள்ளறிவு விளங்குதற்கு இடமுண்டாகாது, ஆதலின் புந்தியை ஒருங்க வைத்து என்றார். புந்தி ஒருங்குதலாவது புத்தி, மனம், அகங்காரம், இந்திரியங்களோடும் உலக விடயங்களிற் சென்று விடய ஞானமாய்ப் பரிணமியாதபடி ஆன்மாவின்கண் ஒடுங்குதல் ஆகும். இனங்களைப் போக நின்று - இனங்கள் என்பன இன்ன என்பது பதவுரையில் விளக்கப்பட்டது. “இலங்களை” என்னும் பாடமும் சில பிரதிகளில் உள்ளது. அது பொருத்தமான பாடம் அன்று. போக நின்று என்பது காரண காரியப் பொருளில் வந்தது இனங்கள் போதலின் பயனாக (ஆன்மாவின்கண்) நிலைத்து நின்று என்று பொருள் கொள்க.. இரண்டையும் நீக்கு (உம்) - இரண்டு என்பன மேலே கூறப்பட்ட உலக விடய ஞானமாகிய பாச ஞானமும் பசு ஞானமும். தத்துவங்கள் சடப் பொருள்கள் ஆதலின் அவை இறைவனால் இயக்கப்பட்டாலன்றித் தாமாக இயங்கா என்று கண்டு அவைகளை ஆன்மா தன்னிடமிருந்து நீங்கிய பின் தோன்றுவதாகிய பசுஞானமும் நீங்கினால் அன்றிப் பதிஞானத்துக்கு ஏதுவாகிய அருளொளி விளக்கமாகிய தெள்ளறிவு விளங்காது, ஆதலின் இரண்டையும் நீக்கி என்றார். இறைவன் ஆன்மாவுக்கு வேறாய் நின்று அறிவித்தலும் உடனாய் நின்று அறிதலும் செய்யாவிடின், ஆன்மாவுக்கு அறிவு விளங்காது என்ற உண்மையை அறிதல் ஆன்மா தன் முனைப்பு நீங்கி ஆன்ம சுத்தி அடைதலுக்கு ஏதுவாயுள்ளது. ஆன்ம சுத்தியில் சிவ தரிசனம் நிகழும். ஒன்றாய் - ஆகி என்பது ஆய் எனக்குறுகி நின்றது—சிவத்திலுடன் வேறற ‘ஏகமாகி; இது ஏகமாகி இறைபணி நிற்றலைக் குறிக்கிறது. மலங்களை மாற்றவல்லார்—“ஏகமாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடும் வல்வினை இன்று” என்ற கருத்துக் கூறப்பட்டது. மனத்திலும் போகம் ஆகி - மனம் என்பது இங்கே பாசஞானம் பசுஞானங்கள் ஆகிய அழுக்குகள் நீங்கித் தூய்மை அடைந்த உள்ளம் அல்லது சிந்தை; இந்த மனதை அடிகள் ‘காயமே கோயிலாக’ என்ற தேவாரப்பாட்டில் ‘மனமணி’ என்று கூறுகின்றார். “ஏகமாய் நின்றே இணை அடிகள் ஒன்று உணரப் போகமாய்த்தான் விளைந்த பொற்

பினன்" என்று சிவஞான போதம் 11 ம் சூத்திர வெண்பா கூறுதல் காண்க. சினக்களை மாற்றவல்லார் - சினம் என்ற சொல் இங்கே பிராரத்துவ வினையின் பயனைத் துன்பம் நுகர நேரின் அதனை உள்ளத்தினுள்ளுஞ் சினங்கொண்டு வெறுத்து எதிர்த்தல் என்ற பொருளில் வழங்கப்பட்டது. இந்த எதிர்ப்பு (reaction) உள்ளத்தில் எழும் சினம் காரணமாக உண்டாதலின் அது சினம் எனக் கூறப்பட்டது. எதிர்ப்பு என்ற காரியம் சினம் என்ற காரணமாகக் கூறப்பட்டது. இந்த எதிர்ப்புகள் பலவாறாக எழுதலின் சினங்கள் எனப் பன்மையாற் கூறப்பட்டது. திருஞானசம்பந்த அடிகள் **சினம்மலி அறுபகை** என்று காமம் குரோதம் மோகம் லோபம் மதம் மாற்சரியம் என்னும் ஆறு குற்றங்களிலும் சினம் மலிந்திருப்பதாகக் கூறுதல் காண்க. (திருச்சிவபுரம் பதிகம் 5-வது பாட்டு) சிவபெருமான் தாம் அடியார்களுக்கு அருளிய பதிஞானத்தினால் அவர்களது உள்ளத்தில் சிவபோகமாய் விளங்குதலினால் விருப்பு வெறுப்புக்களால் உண்டாகும் எதிர்ப்புகள் எழமாட்டா என்பது கருத்து. உள்ளத்தில் புறம் நோக்கும் எதிர்ப்புகள் முற்றிலும் நீங்கினாலன்றி அதனிடத்தில் துவந்துவ மொழிந்து சிவபோக உணர்வு உண்டாகமாட்டாது.

பொறிப் புலன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்புறு மமுதாயவ னேகம்பம்
குறிப்பினுற் சென்று கூடித் தொழுதுமே. ருஉ.

**(உரை)** உள்ளத்தைப் பொறிப்புலன்களைப் போக்கு அறுத்து - உள்ளத்தை ஐந்து பொறிகளின் வழியாய் விடயங்களிடத்துச் செல்லுதலை அறவே ஒழித்து; நெறிப்படுத்து - சிவபெருமானிடத்துச் செல்லும் வழியிற் பொருந்தும்படி செய்து; நினைந்தவர் சிந்தையுள் - அவனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறவரது தூய உள்ளத்தில்; அறிப்புறும் அமுதாயவன் - (பேரின்ப) உணர்வை அடைவிக்கும் அமுது போன்று பேரின்பப் பொருளாயிருக்கிறவனாகிய; ஏகம்பம் - திருக்கச்சியில் (காஞ்சிபுரத்தில்) கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிற ஏகம்பநாதனை; குறிப்பினுற் கூடிச் சென்று - அவனுடைய திருவடிகளைச் சேர்தல் என்னும் மனதால் உணரப்படும் ஒரே கருத்துடன் (அடியார்களாகிய நாமெல்லோரும்) சேர்ந்து; தொழுதும் - வணங்குவோம், (வம்மின்.)

**(விளக்கம்)** பொறிப்புலன்களை பொறி - இந்திரியங்கள்; புலன்களை - விடயங்களிடத்து; வேற்றுமை உருபு மயக்கம். போக்கு அறுத்து - உலக நெறியை முற்றிலும் விட்டு; போக்கு அறுத்து - முதனிலைத் தொழிற் பெயர்; செல்லுதல்; படுதல். பொருந்தல் படுத்தல் பிறவினை; பொருந்தும்படி செய்தல் நெறிப்படுத்து - வீட்டு நெறியிற் செலுத்தி; நெறிப் படுத்து என்ற இரண்டு சொற்கள் ஒரு சொல் நீர்மைப்பட்டு செய்து என்னும் வினையெச்சவாய்ப்பாட்டு வினைமுற்றாய் நினைந்தவா என்ற வினையாலணையும் பெயர்ச் சொல்லில் அடங்கியிருக்கிற நினைந்து என்ற வினையெச்சம்கொண்டு முடிந்தது. சிந்தை - உள்ளம், சிந்தை என்பன ஒரு பொருட் சொற்கள். அறிப்பு உறும் அமுது ஆயவன் - அறிப்பு - உணர்வு. உறும் - அடைவிக்கும். பிறவினைப் பொருளில் வந்தது - அமுது ஆயவன் - பிறப்பு இறப்புக்களை நீக்கும் இன்பப் பொருளாயுள்ளவன். "மத்தகஞ் சேர்தனி நோக்கின்ன வாக்கிறந்தூறமுதே - யொத்தகஞ் சேர்ந்தென்னை யுய்யகின்றோன்" என்று திருக்கோவையார் 106-வது பாட்டு கூறுதல் காண்க. முன்னைய 51-வது பாட்டில் 'மனத்தினுட் போகமாகி' என்பதும், இப்பாட்டில் 'அறிப்புறும் அமுதாயவன்' என்பதும் ஒரே பொருளன. 51-வது பாட்டில் 'மனத்தினுட் போகமாகி' என்பதற்குக் கூறிய கருத்துக்களை இதற்கும் கொள்க.

குறிப்பு என்பது மனத்தாற் குறித்து உணரப்படுவது. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 297-வது சூத்திரம் சேனாவரையர் உரை தொழுதும் - தும் - எதிர்காலம் காட்டும் விகுதி வம்மின் - என்பது குறிப்பெச்சம் "வம்மின் அடியீர் நாண்மலரிட்டுத் தொழுதுய்ய" என்று திருஞானசம்பந்த அடிகள் திருவீழி மிழலைத் தேவாரம் 3-வது பாட்டிற் கூறுதல் காண்க. சாங்கள் தோன்று எழுவாய் தொழுதும் - பயனிலை உலக நெறியில் விடய போக நுகர்ச்சியை முற்றிலும் விட்டு வீட்டுநெறியில் சிவபோக நுகர்ச்சியை நாடி சிவபெருமானை ஒரு நெறிய உணர்வினூற்றொழும் அடியார்களது தூய உள்ளத்தில் சிவபெருமான் பேரின்ப உணர்வுப் பொருளாயிருப்பன் என்ற உண்மை இப்பாட்டிற் கூறப்பட்டது.

செஞ்சுடர்ச் சோதிப்பவளத் திரடிகழ் முத்தனைய
நஞ்சணிகண் டனல்லூருறை நம்பனைநா னொருநாள்
துஞ்சிடைக்கண்டு கனவின்றலைத் தொழுதேற் கவன்றான்
நெஞ்சிடை நின்றகலான் பலகாலமு நின்றனனே. ருந

(உரை) செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் - செவ்வப்பு நிறமான தீயின்கண்ணுள்ள ஒளிபோல விளங்கும் பவளத் தொகுதியையும்; திகழ் முத்து(த்திரள்) - ஒளி விளங்குகின்ற முத்துக்களின் தொகுதியையும்; அனைய - போன்று விளங்கும்; நஞ்சணி கண்டன் - கடலினின்றெழுந்த ஆலகால நஞ்சைத் தரித்த கழுத்தை உடையவனும்; நல்லூர் உறை நம்பனை - திருநல்லூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய நம்பனுமாகிய சிவபெருமானை; ஒருநாள் - முன் ஒரு நாளில்; நான்துஞ் சிடைக்கனவின் தலைக்கண்டு கைதொழுதேன் - நான் உறங்கும்பொழுது கனவினிடத்துக் கண்டு கை களிரண்டையும் கூப்பி வணங்கினேன்; (அவன்) - (அவ்வாறு நான் வணங்கின நாள் தொட்டு) சிவபெருமான்; நெஞ்சிடை நின்று அகலான் - எனது நெஞ்சை விட்டு நீங்காதவனாய்; பலகாலமும் - எப்பொழுதும்; நின்றனன் - நிலை பெற்று நிற்கின்றான். தோழீ! இஃது என்ன வியப்பு என்பது குறிப்பெச்சம்.

(விளக்கம்) இந்தப்பாட்டு ஒரு தலைவி தன்தலைவனைப்பற்றித் தோழிக்குக் கூறிய கூற்றாக அகப்பொருட்டுறையில் வைத்துப் பாடப்பட்டது. மயக்க அறிவு நீங்கித் தெள்ளிய அருள் அறிவு விளக்கப் பெற்ற அடியார்களுடைய தூய நெஞ்சில் சிவபெருமான் எப்பொழுதும் பேரொளியாய் விளங்குகின்றான் என்பது இப்பாட்டின் கருத்து; செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் - சுடர் என்பது இங்கே ஆகுபெயராய்ச் சுடரையுடைய தீயைக் குறிக்கிறது; சோதி-ஒளி. பவளத்திரள் பல பவளங்கள்சேர்ந்த தொகுதி.பவளம் தீயைப்போல ஒளி விளங்கும் சிவந்த நிறமாயிருத்தலின் செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள் என்றார்; திகழ்முத்து - திரள் என்ற சொல்லை முத்துக்கும் கூட்டுக. முத்துத் திரள்போல வெண்மை நிறம் சிவத்தினது தன்னியல்புக்கும் பவளம்போல தூய சிவந்த நிறம் பொது இயல்புக்கும் உவமைகளாகக் கூறியவாறும். வெண்மை என்பது எல்லா நிறங்களும் சேர்ந்ததன்றித் தனித்ததொரு நிறம் அன்று. வெண்ணிறமான பளிங்கானது தான் எந்த எந்த நிறப்பொருளைச் சாரினும் அந்த அந்த நிறப் பொருளாய்க் காட்டுதலன்றி அப்பொருள்களினது நிறம் யாதின்பாலும் தோயாதிருத்தல் போல சிவம் எந்த உயிர்ப் பொருளைச் சாரினும் தான் அதனைப் பற்றாது அதனைக் கடந்து மிக்காய் விளங்குதலை வெண்மை நிறம் குறிக்கிறது. பவளநிறம் போன்ற தூய சிவப்பு நிறம் தூய அன்பைக் குறிக்கிறது சிவம் எல்லா உயிர்களுடனும் வேறறக் கலந்து அவ்வுயிர்களேயாய் அவ்வுயிர்களெல்லாம் தன்னைப்போல பேரின்பம் அடைதல் வேண்டும் என்னும் பேரன்பை உடையவனாயிருத்தலைத் தூய சிவப்பு நிறம் குறிக்கிறது. நம்பன்-இச்சொற்பொருளுக்கு 48-வது பாட்டின்கீழ் எழுதிய குறிப்புக்களைப் பார்க்க. இன் -

சாரியை. கனவின் தலை-தலை-ஏழாம் வேற்றுமை யுருபு. கை தொழுதேற்கு-கைதொழுதேன்+கு. கு - சாரியை. பல்காலம் - 'பல்லாண்டு' என்பது எக்காலத்தையும் குறித்தல்போல பல காலம் என்பதும் எக்காலத்திலும் என்று பொருள்படும். நின்றனன் - இயல்புபற்றி அல்லது தெளிவுபற்றி நிகழ் காலத்தாற் கூறற்பாலது இறந்த காலத்தாற் கூறப்பட்டது. இருள் மல நிலைக்குக்கீழ் 32-வது பாட்டு "உள்ளத்தே நிற்றி யெனுங் கள்ளத்தே நிற்றி" என்று கூறுதலாலும் அருள் நிலைக்குக் கீழ் 35, 37 பாட்டுகள் "(வந்து) புறம்பயம் நம்மூரென்று போயினரே" என்று கூறுதலானும் 38-வது பாட்டு "வெள்ளரோமென்று நின்றார்" என்று கூறுதலானும் அருளுரு நிலைக்குக்கீழ் 47-வது பாட்டு "புல்லிய மனத்துக் கோயில் புக்கனர் என்று கூறுதலானும் அறியும் நெறிக்குக்கீழ் இந்த 53-வது பாட்டு "நெஞ்சிடை நிறைகலான் பல்காலமும் நின்றனனே" என்று கூறுதலாலும் விளங்குகிற வேற்றுமைக் கருத்துக்களின் அழகை நோக்குக. இவ்வேற்றுமைக் கருத்துக்கள் பல்வேறு நிலைகளிலுள்ள உயிரின் பக்குவங்களுக்கு ஏற்ற இறைவனது அருட்செயலைக் குறிக்கின்றன.

உன்மத்தக மலர்சூடி யுலகந்தொழச் சுடலைப்
பன்மத்தகங் கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்
என் மத்தகத்தே யிரவும்பகலும் பிரிவரியான்
தன்மத்தகத் தோரிளம் பிறைசூடிய சங்கரனே. ருச

**(உரை)** தன்மத்தகத்து ஓர் இளம்பிறைசூடிய சங்கரன் - தனது சென்னி மேலே மூன்றாம் பிறைச் சந்திரனைத் தரித்திருக்கின்ற சிவபெருமான்; உன்மத்தகம் மலர் சூடி - ஊமத்தம் பூக்களையும் அச்சென்னியின்மேல் அணிந்துகொண்டு; உலகம்தொழ - உலகத்திலுள்ளார் வணங்கி நிற்க; சுடலைப் பல்மத்தகம்கொண்டு - சுடுகாட்டிலுள்ள பற்களோடு கூடிய தலையோட்டைக் (கையில்) வைத்துக்கொண்டு பலி பல்கடை தோறும் திரிவான்-பிச்சை எடுத்ததற்காகப் பல மனைவாயில்தோறும் சென்று திரிகின்றான்; என் மத்தகத்தே பகலும் இரவும் பிரிவு அரியான் - (அவன்) என் மனத்தினிடத்துப் பகலும் இரவுமாகிய எக்காலத்திலும் பிரியாமலிருக்கின்றான்:

**(விளக்கம்)** சங்கரன் வடமொழிச் சொல். சம், இன்பம், கரன், செய்கின்றவன், உயிருக்கு இன்பத்தைச் செய்கிறவன்; பல+மத்தகம்=பன்மத்தகம் மத்தகம் என்பது தலை. அது இங்கே தலையோட்டைக் குறிக்கிறது. சிவபெருமான் பிரமனது தலையோட்டில் பலி எடுக்கின்றான் என்பது புராண வரலாறு. பலிதிரிவான் - பலிக்குத் திரிவான்; பலி எடுத்தற்குத் திரிவான். என் மத்தகத்தே மனத்தகத்தே என்பது, எதுகைபற்றி மத்தகத்தே எனக் குறுகிநின்றது. குறுக்கல்விகாரம். அரியான் - அருமை என்ற பண்புப் பெயர் அடியாகப் பிறந்த குறிப்பு வினை முற்று. பிரிவு அரியான் - இங்கே அருமை இன்மை என்னும் பொருள்பட நின்றது, எக்காலத்திலும் பிரியமாட்டான்.

புள்ளுவர்ஐ வர்கள்வர் புனத்திடை புகுந்து நின்று
துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறி விளையவொட்டார்
முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான் பாதநீழல்
உள்ளிடை மறைந்து நின்றங்குணர் வினால்எய்ய லாமே. ருரு

**(உரை)** புள்ளுவர் ஐவர் கள்வர்-ஐம்பொறி வேடர்களாகிய ஐந்து திருடர்கள்; புனத்திடைப் புகுந்து நின்று - உலகமாகிய பாலை நிலக்காட்டில் சென்று நின்று; துள்ளுவர் சூறை கொள்வர் - வீட்டு நெறியிலொழுகும் மாந்தராகிய வழிப்போக்கரிடம் குதித்து

அவர்களுடைய மெய் அறிவு ஆகிய பொருளை ஆறலைத்துக் கொள்ளை செய்வாராகி ; தூநெறி விளையல் ஒட்டார் - அவர்கள் சிவபெருமானை அடையச் செய்யும் தூயநெறியில் ஒழுகி மெய் அறிவு முதிர்தற்கு விடமாட்டார்; முன்னுடையவர்கள் தம்மை - தீயசெயல்களை உடைய அந்த ஐம்பொறி வேடர்களை ; முக்கணான் பாதநீழல் உள்ளிடை மறைந்து - மூன்றுகண்களை உடைய சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளின் நிழல் வியாபகத்துக்குள் அடங்கி அவர்கள் அறியாமல் மறைந்து ; அங்கு நின்று உணர்வினால் - அவ்விடத்தில் நின்று (திருவடி நீழலிலடங்கி நிற்றலினாலுண்டாகிய) மெய்யுணர்வினைத்துணைக்கொண்டு;எய்யலாம்-வில்லினால் எய்து வெல்லலாம். ஆதலின் அடியார்களே சிவபெருமானுடைய திருவடி நீழலைச் சார்ந்து ஐம்பொறிப்பகையை வெல்லுமின் என்பது குறிப்பெச்சம்.

**(விளக்கம்)** துன்னுவர்,துறை கொள்வர்-இந்த இரண்டு வினைமுற்றுக்களும் வினையெச்சப் பொருள் தந்து நின்றன. துன்னுவர் என்பது ஐம்பொறிகள் உயிருக்குள்அடங்காது நிற்றலையும், துறை கொள்வர் என்பது அவைகள் உயிரை உலக விடய நெறியில் ஈர்த்துச் செல்லுதலையும் குறிக்கின்றன. தூநெறி விளையல் ஒட்டார் - தூநெறி-மயக்க அறிவினின்று நீங்கிய தூயநெறி. அது சிவமே மெய்ப்பொருள் எனத் துணிந்து அப்பொருளை அடையச் செல்லும் பேரின்ப வீட்டுநெறி. சிற்றின்பத்தைத் தரும் மல அழுக்கு விரவிய உலக நெறியினின்று வேறு பிரித்தற்கு அதனைத் தூநெறி என்றார். தூநெறி விளையல் என்பது வீட்டு நெறியிலொழுகி மெய் அறிவு மேலும் மேலும் முதிர்தல். முன்உடை அவர்கள் - முன் என்பது இங்கே பிறரைத் துன்புறுத்தும் தீவினையைக் குறிக்கிறது. உடைய என்பது உடை எனக் குறுகி நின்றது. முக்கணான் பாத நீழல் உள்ளிடை மறைந்து - முக்கண்ணான் என்பது முக்கணான் எனக் குறுகியது. உள்ளிடை - உள்ளிடம் அதாவது திருவடி நீழல் வியாபகத்துக்குப் புறமல்லாதது. பாதம் நீழல். உள்ளிடை மறைந்து நிற்றலாவது மாந்தர் சிவபெருமானுடைய அறிவு வேட்கைச்செயல்களினது வியாபகத்துக்குள்முறையே தங்கள் அறிவு வேட்கைச் செயல்களை வியாப்பியமாய் அடங்கச் செய்து தன் முனைப்பின்றி நிற்றல். இவ்வாறு அவர்கள் அடங்கி நிற்கும்பொழுது அவர்களுக்குப் பாச உலகம் தோன்றாது ஆதலின், மறைந்து என்றார்.உணர்வு - மேலே கூறியவாறு அறிவு வேட்கைச் செயல்கள் அடங்கி நிற்றலாலுண்டாகும் மெய்யுணர்வு. எய்யலாம் - எய்யல் - வில்லினால் அம்பு எய்யல் புன்னுவர் என்பதற்கு ஏற்ப எய்யலாம் என்றார். அது இங்கே வெல்லுதல் என்னும் பொருள்பட நின்றது. உவமப் பொருள்களும் உவமிக்கப்படும் பொருள்களும் முற்றிலும் வெளிப்பட உரைக்கப்படாததால் இப்பாட்டு ஏகதேச உருவகம். .சிவபெருமானுடைய திருவடி நீழலாகிய அருள் வியாபகத்துள் அடங்கி நின்றால் அல்லாமல் வீட்டு நெறியிலொழுகும் மாந்தர்கள் உலகப் பற்றுக்களை ஒழித்து மெய்யுணர்வை அடைதல் முடியாது என்பது இப்பாட்டில் அடங்கியுள்ள கருத்து. செய்யப்படு பொருள்களாகிய ஐம்பொறிகளை உயிருள்ள வினை முதல்போல உயர்திணையில் வைத்து அடிகள் கூறியதால் ஐம்பொறிகள் உயிருக்குளடங்கி அதன் வயப்பட்டு ஒழுகாது அதனைத் தம் வயப்படுத்தித் தாங்கள் விரும்பும் விடயபோகத்தில் ஈர்த்துச் செல்லும் திறன் குறிப்பிடப்பட்டது.

பத்திப் பேர்வித்திட் டேபரந்த ஐம்புலன்கள் வாய்ப்
பாலேபோகா மேகாவாப் பகையறு வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்கு முக்குணங்கள் வாய்
மூடாவூடாகா லந்தக் கரணமுமொரு நெறியாய்ச்

சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானாகச் செயுமவ னுறையுமிடங்
கத்திட்டோர் சட்டகங் கலந்திலங்கு நற்பொருள்
காலேயோ வாதார்மேவுங் கழுமல வளநகரே. ௫௯

**(உரை)** பகைஅறும்வகை நினைய - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மார்ச்சரியம் என்னும் ஆறுபகைகளும் அறவே நீங்கும் வண்ணம் நினைந்து; பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே - உலக போகவிடயங்களிற் பரந்து செல்கின்ற ஐந்து பொறிகளிடத்துச் சிறிதும் செல்லாமல்; முத்திக்கு இக்கத்தே முடிக்கும் முக்குணங்கள்வாய்-வீடுபேற்றிற்குத் தடையினையே விளைக்கும் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களிடத்து; மூடா(தும்) ஊடா(தும்) - மறைவுபடாமலும் பிணங்காமலும்; காவா - தங்களைக் காத்தும்; நால் அந்தக்கரணமும் ஒருநெறியாய் - மனம், அகங்காரம், புத்தி, சித்தம், என்கிற நான்கு அந்தக்கரணங்களையும் ஒடுக்கிச் சித்தம் (சிந்தை) என்ற ஒரு வழிப்படுத்திச் சிந்தைசெய்து: சித்திக்கே உய்த்திட்டு (உம்) - மெய் அறிவு பெறுதற்கே செலுத்தியும்; பேர்பத்தி வித்திட்டு (உம்) - பேரன்பு ஆகிய விதையை விதைத்தும்; திகழ்ந்த மெய்ப்பரம் பொருள் சேர்வார் - அவ்வாறு செயத் தன் பயனாகத் தங்கள் உள்ளத்திலே அருளொளியாய் விளங்குகிற உண்மையாயும் மேலானதாயுமுள்ள பொருளை இடைவிடாது நினைத்துக்கொண்டிருக்கிற அடியார்களை; தானாகச் செய்தவன் உறையும் இடம் - தன்னோடு இரண்டறக் கலக்கும்படி செய்கிற சதாசிவமூர்த்தி (இலிங்க வடிவில்) திருக்கோயில் கொண்டெழுந்தருளி இருக்கும் இடமானது; கத்திட்டோர் - அருள் நூல்களைக் கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த பெரியார்; சட்டகம் - தங்களுடைய செம்மை அறிவுடன்; கலந்து இலங்கு பொருள்கால் - அத்துவிதமாய்ச் சேர்ந்து விளங்கும் நற்பொருளிடத்து; ஓவாதார் மேவும் - (இடையறாது சிந்தை செய்தலை) ஒழியாதவராகி உறைகின்ற; வளம் கழுமல நகரே - செழிப்பான திருக்கழுமலம் நகர் ஆகும்; ஆகையாலே அடியார்களே திருக்கழுமலத்தில் வீற்றிருக்கின்ற சதாசிவப் பெருமானைத் தொழுது உய்மின் என்பது குறிப்பெச்சம்.

**(விளக்கம்)** பகை அறும் வகை நினையா - இங்கே கூறப்பட்ட ஆறு பகைகளும் பிரகிருதி மாயைப் போகத்தின் உன் முகத்திற்கு ஏதுவாகிய அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, கோபம் என்னும் பஞ்சக் கிலேசங்களுள் அடங்கும். மோகம் - அவிச்சை; மதம் - ஆங்காரம்; காமம் - அவா; உலோபம் - ஆசை; குரோதமும் மார்ச்சரியமும் கோபத்திலடங்கும். பின்னே கூறப்படுகிற ஐம்புலனடக்க முதலியனவெல்லாம் பஞ்சக்கிலேசங்களை ஒழித்தற்கு ஆதலின் 'பகையறும் வகை நினையா' என்றார். பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே (உம்) - புலன்கள் என்ற சொல்லுக்கு மேலே 51-வது பாட்டின் கீழ்க் கூறிய குறிப்புரையைக் கொள்க. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. பால் - பகுதி; ஒரு சிறிதும்; ஏ. அசை; போகாமே - போகாது; மே என்பது எதிர் மறையிடத்து வந்த வினையெச்ச விகுதி. தொக்கி நின்ற 'உம்' விரித்துக்கூறப் பட்டது. முத்திக்கு இக்கத்தே முடிக்கும் - இக்கு+அத்து+ஏ=இக்கத்தே; இக்கு - தடை; ஏ - தேற்றப் பொருளில் வந்தது - முத்திக்கே என்பதிலுள்ள ஈற்று ஏகாரம் அசை. முக்குணங்கள் வாய். வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. மூடா, ஊடா - மூடா, ஊடா இரண்டும் எதிர் மறைவினை யெச்சங்கள். இரண்டிலும்'து' விகுதிகள் தொக்கி நின்றன. எண்'உம்'களும் தொக்கி நின்றன. முக்குணங்கள் வாய் மூடாதும் முக்குணங்கள் வாய் ஊடாதும் என விரிக்க. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. முக்குணங்கள் வாய் மூடல் என்பது ஆன்மா. முக்குணங்களிடத்து மறைந்து அவைகளின் மயமாய் விளங்கல். பிரகிருதி மாயா தத்துவங்கள் ஆன்மாவை உலகவிடய போகம் நுகரும் தன்

மையிற் செலுத்தும் குண மயமாயிருத்தலின், முக்குணங்கள் வாய் மூடா என்றார். முக்குணங்களவாய் ஊடல் என்பது முக்குணங்களுடன் பிணங்கி எதிர்த்தல் (Opposition). மூடலும் ஊடலும் ஆகிய இந்த இரண்டு நிலைகளும் இன்றி முக் குணங்களும் தங்கள் சேட்டைகள் முற்றிலும் ஒழிந்து ஆன்மாவின்கண் அடங்கி நிற்றல் வேண்டும் என்பார், முக்குணங்கள் வாய் ‘மூடா’, ‘ஊடா’ என்றார். காவா - செய்து என்ற வாய்ப்பாட்டு வினையெச்சம். எண் உம்மை தொக்கி நின்றது. நால் அந்தக் கரணமும் ஒரு நெறியாய்-நான்கு அந்தக் கரணங்களும் உலக போக நுகர்வின்கண் நான்கு நெறிகளிற் சென்று விடயித்தல் போல் அல்லாமல் மெய்ப்பொருளைச் சிந்தித்தற் றொழிலைச் செய்யும் சித்தம் (சிந்தை) என்ற ஒரு நெறிப்பட்டு "அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக" என்று சேக்கிழார் அடிகள் பெரிய புராணத்தில் கூறியருளினமை காண்க. அவ்வாறு நான்கு அந்தக் கரணங்களும் ஒரு நெறிப்பட்டு ஆன்மாவுக்குள் அடங்கி ஆன்மா சிவத்தைச் சிந்திக்கவில்லையாயின் அதன் சிந்தையில் அருள் ஒளி விளங்கி தெளிந்த அறிவு உண்டாகாது ஆதலின், ஒரு நெறியாய் என்றார். சித்திக்கே உய்த்திட்டு (உம்) - சித்தி என்பது இங்கே மெய் அறிவைக் குறிக்கிறது. ஏ தேற்றப் பொருளில் வந்தது. உய்த்திட்டு என்பதற்குப் பின் எண் ‘உம்’ தொக்கி நின்றது. பேர்பத்தி வித்திட்டும் - பத்திப்பேர் என்பதனைப் பேர் பத்தி என மாறுக. பேர் - பெரிய; பேர்பத்தி - பேரன்பு; உலக நெறியில் காணப்படும் ஏகதேசப்பட்ட அன்பினின்றும் பிரித்தற்கு ‘பேர்பத்தி’ என்றார். உயிரில் பொருள் உயிர்ப்பொருள் ஒன்றினையும் பற்றாது சிவம் ஒன்றினையேபற்றி நிற்கும் அன்பு பேரன்பு ஆகும் (Absolute impersonal love) உலக விடயங்களைப்பற்றி நிகழும் ஞானரூபமாகிய புத்தி தத்துவத்தின் அராக நீங்கியபொழுது முத்திக்கால எல்லை அளவும் நீங்காது நிற்கும் வாதனாரூபமாய்ப் பொதுமையில் நிகழும் அராக தத்துவ அராகம் உலக விடயங்களிற் செல்லாது சிவத்தினைப்பற்றும் சிவஅராகமாய் வெளிப்பட்டு இச்சாரூபமாயுள்ள ஆன்மாவின் இச்சாசத்தியை முத்திக்கு ஏதுவாகிய சாதகங்களிற் செலுத்துதலால் பத்திப்பேர் வித்திட்டு என்றார். இவ்வுண்மை சிவஞான பாஷியத்திலும் (156, பக்கம்) பௌஷ்கர ஆகமத்திலும் கூறப்பட்டுளது. நிகழ்ந்த மெய்ப்பரம் பொருள் சேர்வார்தாமே - நிகழ்ந்த - இயல்புபற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது - மெய்ப்பரம்பொருள் - என்பதை மெய்ப்பொருள் பரம்பொருள் என விரிக்க. நிலையில்லாத உலகப் பொருளினின்று பிரித்தற்கு மெய்ப்பொருள் என்றும், உயிர்ப்பொருளினின்று பிரித்தற்குப் பரம்பொருள் என்றும் கூறினார். சேர்தல் என்ற சொல்லுக்கு இடைவிடாது நினைத்தல் என்று பரிமேலழகர் திருக்குறள் முதல் அதிகாரத்தில் கூறியிருத்தல் காண்க. தாமே - தாம் அசை நிலை. ஏ - பிரிநிலைப் பொருளில் வந்தது. தானாகச் செய்தவன் உறையும் இடம் - தானாகச் செய்தவன் - இருவேறு பொருள்களாயிருக்கிற தானும் (சிவமும்) அடியார்களும் வேற்றுமையின்றி ஒன்றெனும்படி. அத்துவிதமாய்ச் சேரும்படி செய்கிறவன். சிறப்பு இயலில் மெய்ப்பரம் பொருளாயுள்ளவனே, பொது இயலில் திருக்கழுமலத்தில் சதாசிவ வடிவிலும் விளங்குகின்றான் என்பார், "மெய்ப் பரம்பொருள் சேர்வார் தாமே தானாகச் செய்தவன்" என்று கூறினார். கத்திட்டோர் என்பது கத்திட்டோர் என்று எதுகை நோக்கித் திரிந்தது. இடு - துணைவினை கற்றோர் முதல் மூன்று அடிகளிலும் சேர்வார் வரை அடியார்களைப்பற்றிக் கூறப்பட்ட கருத்துக்கள் 4-வது அடியில் கத்திட்டோர் என்ற சொல்லாற் கூறப்பட்டன. சட்டமகம் - சட்டம+கம=சட்டங்கம். சட்டம் - செம்மை; கம - அறிவு. சட்டங்கம்=செம்மை அறிவு. சிவத்தினையே நேர்மையாய் நினைப்பும் மறப்புஅறநினைக்கும் அறிவு; கலந்திலங்கும் நற்பொருள் காலே - நற்பொருள் - நலமாகிய இன்பத்தினையே உயிர்களுக்கு எப்பொழுதும் செய்கின்ற பொருள்; கால் ஏழாம் வேற்றுமை யுருபு; ஏ - அசை. மூன்றாவது அடியில் நிகழ்ந்த மெய்ப் பரம்பொருள் என்பது நான்காவது அடியில் ‘இலங்கும் நற்பொருள்’ என்றும், மூன்றாவது அடியில் ‘தானாகச் செய்யும்’ என்பது நான்காவது அடியில் ‘கலந்து’ என்றும் கூறப்பட்டன. ஓவாதார் ஓவுதல் - ஒழிதல் - (சிந்தித்தலை) ஒழியாதாராகி அதாவது இடையறாது சிந்தித்துக் கொண்டிருக்கிறவர்களாகி. மூன்றாவது அடியில் சேர்வார் என்பது நான்காவது அடியில் ஓவாதார் என்றும் கூறப்பட்டது. இந்த அழகிய சந்தத் தேவாரப்பாட்டில் முதல் மூன்று அடிகளும், அடியார்களுடைய அக இலக்கணம் கூறி அத்தகைய அடியார்களுக்கு அருள் செய்யும் திருக்கழுமல நாதருடைய பெருமையும் கூறுகின்றன.



திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்